# திருவள்ளுவர் திடுக்கிடுவார்



நாமக்கல் கவிஞர்

இன்ப நிலையம்
மயிலாப்பூர் :: சென்னை—4.

# பதிப்புரை

'திருவள்ளுவர் திடுக்கிடுவார்' என்ற தலைப்பில் நாமக்கல் கவிஞர் அவர்கள் எழுதி யிருக்கும் இந் நூலைப் பார்த்ததும் முதலில் எல்லோருக்கும் திடுக் கிடத்தான் நேரிடும்!

ஆனால், ஏன் இந்தத் தலைப்பில் நூல் எழுத நேரிட்டதென்பதற்குத் தக்க ஆதாரங்களுடன் கவிஞரவர்கள் காரணம் கூறுகிறார்கள். நாம் அவற்றை யெல்லாம் படித்த பிறகு—இதுவரை பரிமேலழகர் போன்ற பலர் திருக்குறளுக்கு எழுதி யுள்ள உரைகள் பல இடங்களில் முரண்பாடாக இருப்பதைக் கண்டு திகைப்படைகிறோம்; திடுக்கிடு கிறோம். அவற்றிற்குத் திருவள்ளுவர் கருத்துவழி கவிஞரவர்கள் கூறும் புது உரை போற்றத்தக்க முறையில் அமைந்திருக்கிறது.

இந்நூலை வெளியிடும் நல்வாய்ப்பை அளித்த கவிஞரவர்களுக்கு எங்கள் நன்றியும் வணக்கமும் உரியதாகும்.

சோம. சுவாமிநாதன்,
இன்ப நிலையம்.

## நாமக்கல் கவிஞர் எழுதிய நூல்கள்

★

திருக்குறள் புது உரை
வள்ளுவரின் உள்ளம்
திருவள்ளுவரும் பரிமேலழகரும்
தமிழ் மொழியும் தமிழரசும்
தேசபக்தர் மூவர்
தமிழ்த் தேன்
கீர்த்தனங்கள்
தமிழன் இதயம்
சங்கொலி
கவிஞன் குரல்
இசைத் தமிழ்
மாமன் மகள்
அவளும் அவனும்
மலைக்கள்ளன்
காந்தி அஞ்சலி
திருக்குறள் கருத்துரை

# திருவள்ளுவர் திடுக்கிடுவார்

ஆம், திருவள்ளுவர் இப்போது இங்கு வருவாராஞல் திடுக்கிட்டுத் திகைத்துப் போவார். அவர் அரும்பாடுபட்டு எழுதிவைத்துப் போன குறள்களுக்குப் பல பேர் பலவிதமாகத் தம்முடைய மனம் போனபடியெல்லாம் உரை சொல்லுவதைப் பார்த்தால் திகைக்காமல் திடுக்கிடாமல் வேறு என்ன செய்வார்? அது மட்டுமா! அவருடைய கருத்துக்களுக்கு முற்றிலும் விரோதமான உரைகள் சொல்லுவதைக் கண்டு கதறிக் கண்ணீர்விட்டு அழுதாலும் அழுதுவிடுவார்.

தமிழன்னை நெடுங்காலம் செய்த தவத்தின் பயனே திருக்குறள் என்ருல் அது முற்றிலும் தகும். திருக்குறள் தமிழில் இருப்பது தமிழ் இனத்துக்கு என்றென்றும் அழியாப் புகழ்தரக்கூடியது. என்ருலும், திருக்குறள் அறிவு தமிழருக்குமட்டும் என்று கருதப்பட்டதல்ல. மானிட வாழ்வின் எல்லாத் துறைகளிலும் பயன்படக் கூடிய நல்லறிவுகள் அனைத்தும் அடங்கிய பொது நூல் திருக்குறள். உலக மகா இலக்கியங்களுக்குள் ஒப்பரியது திருக்குறள் என்பது பல நாட்டின் பிறமொழி அறிஞர்கள் ஒப்புக்கொள்ளும் உண்மை. ஏறத்தாழ உலகிலுள்ள எல்லா முக்கியமான பாஷைகளிலும் அதை மொழி பெயர்த்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதே திருக்குறளின் பெருமைக்குப் போதுமான சான்ருகும்.

அப்படி உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் என்றென்றும் பயன் தரக்கூடிய பொய்யாமொழியான திருக்குறள், தமிழில் இருப்பதால் அதில் அடக்கப்பட்டிருக்கும் அறிவுகளைச் சரியாகக் காட்டக்கூடிய உரை சொல்ல வேண்டிய பொறுப்பு தமிழர்களைச் சேர்ந்ததேயாகும். தமிழர்களே திருக்குறளுக்குச் சரியான உரை சொல்ல முடியாவிட்டால் அது உலகிலுள்ள மற்ற மக்களுக்கு எப்படி உதவும்?

திருக்குறள் தோன்றிய காலம் எது என்பதை நிச்சயமாகச் சொல்லப் போதுமான ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. திருவள்ளுவரைப்பற்றியும் அவரை ஆதரித்தவரென்று சொல்லப்படுகிற ஏலேல சிங்கரைப் பற்றியும் கர்ண பரம்பரையாகக் கிடைத்துள்ள பலவிதக் கட்டுக் கதைகளைவிட, சரித்திரம் என்று கொள்ளத் தகுந்த எதுவும் இல்லை. திருக்குறளுக்குப் பின்னால் தோன்றி, திருக்குறளிலுள்ள வாக்கியங்களையும் கருத்துக்களையும் மேற்கோளாகக் கொண்டுள்ள சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களையும், புறநானூற்றுச் செய்யுட்களில் இரண்டொரு செய்யுட்களையும் ஆதாரமாகக் கொண்டு ஆராய்ச்சிக்காரர்கள் திருக்குறள் தோன்றிய காலத்தை ஒருவாறு ஊகிக்கின்றார்கள். அப்படி ஆராய்கின்றவருள் சிலர் திருக்குறள் தோன்றிய காலம் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால் என்றும், வேறு சிலர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் என்றும், இன்னும் சிலர் இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் என்றும் ஊகிக்கிறார்கள். இவற்றுள் எது சரி என்பது எப்படியானாலும், திருக்குறள் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்டது என்று கொள்ளுவது குற்றமாகாது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அரங்கேறி, 'தெய்வ நூல்' என்றும், 'பொய்யா மொழி' என்றும், 'தமிழ்மறை' என்றும், 'பொதுமறை' என்றும் போற்றப்பட்டு வந்திருக்கிற திருக்குறளுக்கு, சுமார் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட

பரிமேலழகர் உரைதான் மிகச் சிறந்த உரையாகக் கிடைத்துள்ளது. பரிமேலழகருக்கு முன்னால் ஒன்பது பேர் திருக்குறளுக்கு உரை எழுதியிருந்தார்கள். அவைகள் எல்லாவற்றினும் சிறந்ததாகப் பரிமேலழகர் உரை ஏற்றுக் கொள்ளப்பட்டதால் மற்ற உரைகளெல் லாம் வழக்கிழந்து மறைந்துவிட்டன. அதனால் கடந்த அறுநூறு ஆண்டுகளாகத் தமிழ் மக்கள் பரிமேலழகர் உரையைப் பின்பற்றித்தான் திருக்குறளை அனுபவித்து வருகின்றார்கள். ஆனால் போற்றற்குரிய உரையாசிரிய ரான பரிமேலழகரும் பலவிடங்களில் திருவள்ளுவருடைய கருத்துக்குப் பொருந்தாத உரைகளையும் சில இடங்களில் திருவள்ளுவருடைய கருத்துக்கு முற்றிலும் விரோதமான உரைகளையும் செய்துவிட்டார். பரிமேலழகருடைய உரையைப் பின்பற்றி அதற்கு 'விரிவுரை' என்றும், 'விளக்க உரை' என்றும், 'தெளிவுரை' என்றும் பலபேர் பலவிதமான வியாக்யானங்களைச் செய்திருக்கிறார்கள். அவைகளெல்லாம் பரிமேலழகர் உரைகளை மேலும் குழப்பிவிட்டன. இந்தக் குழப்பமான உரைகளை மனதில் வைத்துக்கொண்டு பல பேச்சாளர்கள் வெகு விபரீதமான முறையில் திருக்குறளை மேற்கோளாகக் காட்டி உபதேசப் பிரசங்கங்களைச் செய்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு பிரசங்கத்தைக் கேட்டபோது என்னுள் கிளர்ந்த சிந்தனையே இந்த கட்டுரைக்குக் காரணம்.

கல்வி கேள்விகளிற் சிறந்த ஒரு அறிஞர் ஒரு வெகு நல்ல சொற்பொழிவு செய்தார். அந்தச் சொற்பொழிவு பொதுநலத்துக்கான ஒரு பெரிய நன்முயற்சியைப் பற்றியது. சுமார் ஒரு மணி நேரம் பிரசங்கம் செய்து விட்டு முடிவுரையாக அவர் சொன்னார்:

"இந்தக் காரியம் மிக்கக் கடினமானது; என்றாலும் நாம் இதைச் செய்து முடிக்க உறுதி கொள்ள வேண்டும். மன உறுதி மட்டும் இருந்தால் முடியாத காரியம் என்று ஒன்றுமில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் தான் எந்தக் காரியத்தையும் செய்து முடிக்க முடியும் என்ற மன உறுதியும் ஊக்கமும் இருக்கவேண்டும். அதுதான்

மனிதத் தன்மையின் சிறப்பு. அப்படி அரிய பெரிய காரியங்களையும் செய்ய முடியும் என்ற உறுதியும் ஊக்கமும் இல்லாதிருப்பது பெருங்குற்றம். இதை வள்ளுவர் பெருமான் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார். எப்படியென்றால்:

ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல்.

பாருங்கள், எவ்வளவு அழகாகவும் அழுத்தமாகவும் சொல்லுகிறார்! 'உள்ள வெறுக்கை ஒருவற்கு ஒளி; அஃதிறந்து வாழ்தும் எனல் ஒருவற்கு இளி' என்கிறார் நமது பொய்யாமொழிப் புலவர். மன ஊக்கந்தான் மனிதனுக்கு ஒளியுண்டாக்குவது. அந்த மன ஊக்கம் இல்லாமல் உயிர் வாழ்வது குற்றம் என்கிறார். ஆதலால் அரிய பெரிய காரியங்களையும் செய்ய முடியும் என்ற உறுதியும் ஊக்கமும் நம் ஒவ்வொருவருக்கும் இருக்குமானால் நாம் மேற்கொண்ட இந்த நன்முயற்சி கைகூடும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை'' என்று முடித்தார்.

இதைக்கேட்ட என் உள்ளத்தில் ஒரு புயற்காற்று புறப்பட்டதுபோல் பலவிதமான எண்ணங்கள் பதறியெழுந்து, என்னைத் தவிக்கச் செய்துவிட்டன. பிரசங்கியார் வெகு அழகாகத்தான் பேசினார். எடுத்துக்கொண்ட விஷயத்துக்கு மிகவும் பொருத்தமாகத்தான் பேசினார். சபையிலுள்ளவர்கள் எந்தப் பொதுநலப் பணியைப் பற்றிக் கூடினார்களோ, அதற்கு வேண்டிய ஊக்கமும் உத்ஸாகமும் உண்டாக்கத்தான் பேசினார். மொத்தத்தில் அந்தச் சொற்பொழிவு நல்ல பயனுண்டாக்கக்கூடிய முறையில்தான் அமைந்திருந்தது. அந்தப் பேச்சை சபையோரும் பாராட்டினார்கள். அவைத் தலைவரும் புகழ்ந்தார். நானும் ரசித்தேன்.

ஆனால், அந்தப் பிரசங்கியார் தமது முடிவுரையில் மேற்கோளாகக் கொண்ட குறளும் அதற்கு அவர் சொன்ன பொருளும்தான் என்னைக் கலக்கமடையச்

செய்தன. அந்தக் கலக்கத்தில் என்னுள்ளத்தில் பல கேள்விகள் எழுந்தன. அவை:

'ஒவ்வொரு மனிதனுக்கும், தான் எந்தக் காரியத்தையும் செய்துவிட முடியும் என்ற மன உறுதியும் ஊக்கமும் இருக்கவேண்டும் என்றும் அந்த மனஉறுதியும் ஊக்கமும் இல்லாவிட்டால் அது குற்றமாகும் என்றும் சொன்னாரே! அது சரியா? மன உறுதியும் ஊக்கமும் இருந்துவிட்டால் எந்தக் காரியத்தையும் செய்துவிட முடியுமா? அப்படியானால் எந்தக் காரியத்தையும் எவரும் செய்துவிடலாம் என்றல்லவா தோன்றுகிறது? அது உண்மைக்குப் பொருந்துமா? இரண்டு கண்ணும் இல்லாத குருடன் ஒருவன் தான் ஒரு காட்சியைக் காண வேண்டும் என்று மன உறுதியும் ஊக்கமும் கொண்டு விட்டால் மட்டும் கண்டுவிட முடியுமா? காலணாக்கூடக் கையிலில்லாத ஒரு ஏழை ஒரு விலையுயர்ந்த பொருளை வாங்கவேண்டும் என்று மன உறுதியும் ஊக்கமும் கொண்டுவிட்டால் மட்டும் வாங்கிவிட முடியுமா? அப்படித் திருவள்ளுவர் சொல்லுவாரா? எப்படிப்பட்ட அரிய பெரிய காரியத்தையும் செய்துவிட முடியும் என்ற மன ஊக்கம் இல்லாமல் உயிர் வாழ்வது குற்றம் என்பது சரியா? அப்படியானால் பெரும்பாலும் மனிதர்கள் அக் குற்றம் உள்ளவர்களாகத்தானே இருக்க முடியும்?' என்றெல்லாம் என் மனம் குழம்பியது.

பிரசங்கியார் மேற்கோளாகச் சொன்னது திருவள்ளுவருடைய பொய்யா மொழியாகிய குறள்தான். அதற்கு அவர் சொன்ன பொருளும் அதற்குப் பரிமேலழகர் சொன்ன உரைதான்.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்

என்பதிலுள்ள பதங்களும் பரிமேலழகர் செய்துள்ள உரை சரியானது என்று எண்ண இடமளிக்கின்றன. ஆனால் திருவள்ளுவரும் அந்த உரையைத்தான் கருதியிருப்பாரா? இல்லை, திருவள்ளுவர் கருதிய உரை அதுவல்ல. திருவள்ளுவருடைய கருத்தை அறியாமல் பதங்

களுக்குப் பொருள் செய்ததால், இவ்வளவு விபரீதமாக இந்தக் குறளின் அருமையான நோக்கம் சிதைக்கப்பட்டு விட்டதே என்பதை நான் உணர்ந்தபோதுதான்—இந்த உரையைக் கேட்டால் 'திருவள்ளுவர் திடுக்கிடுவார்' என்ற எண்ணம் உதித்தது.

இனி, இந்தக் குறளையும் அதற்குப் பரிமேலழகர் செய்துள்ள உரையையும் நிதானமாக ஆராய்ந்து பார்ப்போம்: இந்தக் குறள் திருக்குறள் 'ஒழிபியல்' என்ற பகுதியில் 'பெருமை' என்ற அதிகாரத்தின் முதற்பாட்டு. 'பெருமை' என்பது ஒவ்வொருவருக்கும் அவரவர் காரியத் திறமையில் அவரவருக்குள்ள தன்னம்பிக்கை உணர்ச்சி, அதாவது தனக்குள்ள திறமையைத் தானே உணர்ந்து அதற்கேற்ற பெருமை கொள்ளுதல். இந்தப் பெருமை ஒருவருக்கு எப்படி உண்டாகிறது, அதை எப்படிக் காத்துக்கொள்ள வேண்டும், உண்மையான பெருமை எது, போலிப் பெருமை எது என்பனவற்றை விளக்குவது இந்த அதிகாரம். அந்த அதிகாரத்தின் முதற் குறளாகிய இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் செய்துள்ள உரை என்னவெனில் :

'ஒருவர்க்கு ஒளி உள்ள வெறுக்கை = ஒருவனுக்கு ஒளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்க மிகுதி; ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல் = ஒருவனுக்கு மாசாவது அச்செயலை ஒழித்து உயிர் வாழக் கடவேமென்று கருதுதல்' என்பது பரிமேலழகரின் பத உரை.

இதற்கு விசேட உரையாக அவர் சொல்லுவது: ஒளி—தானுளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை. 'ஒளிநிறு னேங்குபுகழ் செய்வான்' என்றார் பிறரும். மேலும் 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்றாராயினும் ஈண்டு அவை அளவிறந்த ஒப்புரவு, ஈகை முதலியவாம். அவற்றினுடைய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு 'உள்ள வெறுக்கை' என்றும் அது தன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியும் கூறினர்—என்பது விசேட உரை.

பரிமேலழகர் உரையின் சாரம் என்னவென்றல்: பிறர் செய்ய முடியாத காரியத்தை நான் செய்வேன் என்று எண்ணுகின்ற ஊக்க மிகுதி ஒருவனுக்குப் புகழ் உண்டாக்கும். அந்த ஊக்க மிகுதி இல்லாமல் உயிர் வாழலாம் என்று எண்ணுவது குற்றம்—என்பது.

இதில் பிறர் செய்ய முடியாததை நான் செய்வேன் என்று மிகுந்த ஊக்கம் கொள்வது ஒருவனுக்குப் புகழுண்டாக்கலாம். ஆனல் அப்படி ஊக்கம் கொள்ளாத வனுக்குப் புகழ்தான் இல்லாமற் போகுமேயல்லாமல் அது எப்படிக் குற்றமாகும்? பசித்து வந்த ஒருவனுக்கு உணவளித்துப் பசியை ஆற்றுகின்ற ஒருவன் ஒரு நல்ல காரியத்தைச் செய்தவனகிருன். அப்படிப் பசித்துவந்த ஒருவனுக்கு உணவளிக்கச் சக்தியில்லாத ஒருவன் உண வளிக்க முடியாமல் இருந்துவிட்டால் அவன் அந்த நல்ல காரியத்தைச் செய்யமுடியாதவன் என்பதுதான் ஆகுமே யல்லாமல், அவன் எப்படிக் கெட்ட காரியம் செய்தவ னுவான்? ஆதலால் இந்த உரை தவருகத்தான் இருக்க வேண்டும். அந்தத் தவறு என்னவென்பதைக் கண்டறிய இந்த அதிகாரத்திலுள்ள மற்றக் குறள்களையும் ஆராய வேண்டும். ஆராய்வோம்:

இதற்கு அடுத்த குறள்:

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்

இதன் பொருள்: எல்லா மனிதர்களும் பிறப்பில் சமானமானவர்கள்தாம். ஆனல் பெருமை அடைவது எல்லாருக்கும் சமமாகக் கிடைக்காது. அது அவரவ ருடைய காரியத் திறமைக்குத் தக்கபடிதான் கிடைக்கும் —என்பது.

இதனுல் முதற் குறளில் சொல்லப்பட்ட 'ஒளி ஒரு வற்கு உள்ள வெறுக்கை'—அதாவது—'ஒவ்வொரு மனித னுக்கும் மனப்பெருமை புகழ் உண்டாக்கக்கூடியது' என்ற பொதுத்தன்மை அடிபட்டுப் போகின்றது. ஆதலால் 'உள்ள வெறுக்கை' இல்லாதவனைக் குற்ற முடையவனகச் சொல்ல முடியாது.

இதற்கு அடுத்த குறள்:

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்

இதன் பொருள்: மேலான குலத்திலோ பதவியிலோ இருந்துவிட்டாலும் மேலான தன்மையில்லாதவர்கள் மேன்மக்களாகிவிட மாட்டார்கள். கீழான குலத்திலோ நிலைமையிலோ இருக்க நேர்ந்துவிட்டாலும் கீழான தன்மையில்லாதவர்கள் கீழ்மக்களாகிவிட மாட்டார்கள் —என்பது.

இதனுல் 'உள்ள வெறுக்கை' என்ற மனப்பெருமை உயர்ந்த பிறப்பையோ உயர்ந்த பதவியையோ பொறுத்தது அல்ல என்பது நிச்சயமாகிறது. அதனுல் 'உள்ள வெறுக்கை' எல்லா மனிதரிடத்தும் பொதுவாக இருக்கக் கூடியதல்ல. ஆகையினுல் 'உள்ள வெறுக்கை' இல்லாமலிருப்பது ஒருவனுக்குக் குற்றமாவது எப்படி?

இதற்கடுத்த குறள்:

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு

இதன் பொர்ருள்: கற்புடைய பெண்களைப் போலவே 'உள்ள வெறுக்கை' என்ற மனப்பெருமையும் ஒவ்வொருவனும் தன்னுடைய நிலைமைக்குத் தக்கபடி தானே நடந்துகொள்வதைப் பொறுத்தது. அதாவது ஒரு பெண் தன்னுடைய கற்பொழுக்கத்தைத் தானே காத்துக்கொள்ள வேண்டியதன்றிப் பிறர் சொல்லியோ அல்லது பிறருடைய உதவியினுலோ காக்கப்படுவதல்ல. அதைப் போலவே ஒருவனுடைய பெருமையும் அவனே அவனுடைய நிலைமைக்குத் தக்கபடி கவனித்துக்கொள்ள வேண்டியதேயன்றிப் பிறர் உதவியினுல் கிடைப்பதல்ல —என்பது.

இதனுல் மனப்பெருமை என்பது அவனவனுக்கு அப்போதைக்கப்போதுள்ள சூழ்நிலைக்குத் தகுந்தபடி கவனித்துக்கொள்ளவேண்டிய சிறப்புக் குணம் ஆகிறது.

சிறப்புக் குணம் இருப்பது புகழத்தக்கது. ஆனல் சிறப்புக் குணம் இல்லாமை குற்றம் என்பது எப்படி?

இதற்கடுத்த குறள்:

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்

இதன் பொருள்: 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமை உள்ளவர்கள், செய்வதற்குக் கடினமான காரியத்தையும் செய்வார்கள்—என்பது. இதனுல் மனிதருக்குள் எல்லாரும் கடினமான காரியங்களைச் செய்துவிட முடியாது. மனப்பெருமை உள்ளவர்கள்தாம் செய்ய முடியும் என்பது தெளிவாகிறது. கடினமான காரியத்தையும் செய்கிறவர்கள் பெருமையடைகிறவர்களே. ஆனல் அப்படிச் செய்ய முடியாதவர்கள் எப்படிக் குற்றமுடையவர்களாவார்கள்?

இதற்கடுத்த குறள் :

சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு

இதன் பொருள் : தம்மினும் பெரியவர்களை மதித்து அவரை அண்டித் தமக்குத் தெரியாததைத் தெரிந்து கொள்ளலாம் என்ற எண்ணம் சிறியவர்களிடத்தில் இருக்காது—என்பது. இதிலுள்ள 'சிறியார்', 'பெரியார்' என்பவர்கள் யாவர் என்பதை இங்குள்ள சூழ்நிலையைக் கொண்டு நாமே பொருள் செய்து கொள்ளவேண்டும். 'சிறியார்' என்பது சாதாரணமாகச் சொல்லப்படுகிறபடி குணத்திலும் நடத்தையிலும் குறைந்தவர்களாகிய 'சிறியார்' அல்ல. 'பெரியார்' என்பதும் அறிவிலும் ஒழுக்கத்திலும் மேலானவர்களான 'பெரியார்கள்' அல்ல. இந்த அதிகாரத்தின் நோக்கத்தையும் இக்குறளின் சூழ்நிலையையும் ஒட்டி, இங்கே 'சிறியார்' எனப்பட்டவர் 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமையிற் 'சிறியார்'. அதே மாதிரி இங்கே 'பெரியார்' எனப்படுகிறவர்களும் 'உள்ள வெறுக்கை' வல்லமையிற் 'பெரியார்' அந்த முறையில் இந்தக் குறளின் கருத்து

என்னவென்றால், 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமையில் சிறியவர்களாக உள்ளவர்களுக்கு, அவர்கள் தம்முடைய வல்லமைக்கு மீறிய ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கி, அது செய்ய முடியாமற் போகிற போது, தம்மிலும் வல்லமையிற் பெரியவர்களை அணுகி அவர்களிடத்திலிருந்து அறிந்து கொள்ளலாம் என்ற நல்ல நோக்கம் இருக்காது—என்பது.

இதனால் 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமையில் சிறியவர்களும் உண்டு, பெரியவர்களும் உண்டு என்பது தெளிவாகின்றது. அதனால் குறைந்த 'உள்ள வெறுக்கை' உள்ளவன் மிகுந்த 'உள்ள வெறுக்கை' உள்ளவனைப் பேணி அவனிடம் அறியவேண்டியதை அறிந்துகொள்ள வேண்டும் என்பதும் அறியக் கிடக்கின்றது. அப்படியானால் எல்லோரும் எல்லாக் காரியத்தையும் செய்துவிட முடியும் என்ற 'உள்ள வெறுக்கை' அனுபவத்தில் முடியாதது என்று தெரிகின்றது. ஆயின், முதல் குறளுக்கு 'ஒருவனுக்கு ஒளியாவது பிறரால் செயற்கரிய செய்வோம் என்று கருதும் ஊக்கமிகுதி; ஒருவனுக்கு மாசாவது அச்செயலை யொழித்து உயிர் வாழக் கடவேம் என்று கருதல்' என்ற உரை எப்படிப் பொருந்தும்?

இதற்கடுத்த குறள் :

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்

இதன் பொருள் : சிறப்பும்கூட, தகுதியில்லாதவர்களுக்கு வந்துவிட்டால் அது அதிக்கிரமங்கள் செய்வதே வேலையாக இருக்கும். அதாவது சில சமயங்களில் தகுதியில்லாதவர்களுக்கும் சிறப்பான பதவிகள் கிடைத்து விடுவதுண்டு. அதனால் அவர்கள் அதிக்கிரமங்களே செய்துகொண்டிருப்பார்கள்—என்பது.

இதனால், உண்மையாகவே 'உள்ள வெறுக்கை' என்ற மனப்பெருமை இல்லாதவர்களுக்கும் வெளிப் பெருமை கிடைத்துவிடுவதுண்டு. அதனால் 'ஒளி ஒருவற்கு உள்ள வெறுக்கை' என்ற ஒளி உண்டாகி,

புகழும், புகழை ஒட்டிய சிறப்புப் பதவியும் கிடைத்து விடுகிறது. உண்மையான மனப்பெருமை இல்லாததால் அதிக்கிரமங்களையே செய்கிறார்கள். எனவே 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமை இல்லாதவர்களும் சிறப்படைந்து விடுகிறார்கள் என்றால் உள்ள வெறுக்கை இல்லாதிருப்பது குற்றம் என்று பொதுப்படச் சொல்ல இடமில்லை.

இதற்கடுத்த குறள் :

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து

இதன் பொருள் : 'உள்ள வெறுக்கை' என்ற பெருமையுள்ளவர்கள் எப்போதும் பணிவுடையவர்க ளாக இருப்பார்கள். அந்த மனப்பெருமை இல்லாமல் சிறப்படைந்து விடுகிறவர்கள் எப்போதும் தம்மைத் தாமே மெச்சிக் கொள்வார்கள். பணிவுடையவர்களாக நடந்துகொள்ள மாட்டார்கள்—என்பது.

இதனால், உள்ள வெறுக்கை என்ற தன்னுடைய திறமையில் தனக்குள்ள நம்பிக்கையை அகந்தையாகக் கொண்டு செலுத்துகிற சிறுமை மனப்பான்மை விளக்கப் படுகிறது. தன்னம்பிக்கையோடு ஒரு அரிய காரியத் தையும் செய்யலாம் என்ற மனப்பெருமை வெறும் அகங் காரமல்ல என்பதும் தெளிவாகிறது.

இதை, அடுத்த குறள் இன்னும் தெளிவாக்குகிறது.

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்

இதன் பொருள் : தன்னம்பிக்கை என்ற பெருமை என்னவெனில் அகங்காரம் இல்லாதிருத்தல், அந்தத் தன்னம்பிக்கையின் சிறுமை என்னவெனில் அகங்காரத் தையே நடத்திவிடுவது. அதாவது அகங்காரம் இல்லாத தன்னம்பிக்கைதான் 'உள்ள வெறுக்கை' என்ற மனப் பெருமை. அந்தத் தன்னம்பிக்கை அகங்காரமாகி விடுகிற போது அது பெருமையல்ல. அது சிறுமைத்தனமாகி விடுகிறது.

இதனால் உள்ள வெறுக்கை இல்லாமை இகழத்தக்க தல்ல. ஆனால் வெறும் அகங்காரத்தை 'உள்ள வெறுக்கை' என்ற பெருமையாக எண்ணிக்கொள்வது இகழத்தக்கது என்று தெரிகிறது.

இந்தப் 'பெருமை' அதிகாரத்தின் கடைசிக் குறள் :

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

இதன் பொருள் : மனப் பெருமை உள்ளவர்கள் பிறருடைய குற்றத்தை மறைத்துவிட்டுக் குணத்தைப் பாராட்டுவார்கள். மனப்பெருமை இல்லாதவர்கள், (அவர்களுக்கு ஒரு சிறப்பான பதவி கிடைத்துவிட்டால்) பிறருடைய குணங்களை விட்டுவிட்டுக் குற்றங்களை மட்டும் சொல்லித் தூற்றிவிடுவார்கள்—என்பது.

இனி, மேலே சொல்லப்பட்ட ஒன்பது குறள்களின் கருத்துகளை வைத்துக்கொண்டு இந்த அதிகாரத்தின் முதற் குறளையும் அதன் பொருளையும் கவனிப்போம். இந்த அதிகாரம் அறிவுறுத்துவது என்ன வென்றால் :— ஒவ்வொரு மனிதனுக்கும் தான், எந்தக் காரியத்தையும் செய்யலாம் என்ற மனச் செல்வமான 'உள்ள வெறுக்கை' இருக்கவேண்டியது நல்லதுதான். அதனால் சிறப்புண்டாகும். ஆனால் அந்தச் சிறப்பும் அவனவ னுடைய காரியத்திறமைக்குத் தக்கபடிதான்கிடைக்குமே யல்லாமல் எல்லாரும் ஒரேமாதிரி சிறப்படைந்துவிட முடியாது. இந்த மனப்பெருமை என்பது, மேலான குலத்தையோ மேலான பதவியையோ பொறுத்ததும் அல்ல. அது ஒரு பெண் தன்னுடைய கற்பைத் தானே கவனித்துக்கொள்வதைப்போலத் தனித்தனி மனிதன் தன் நிலைமைக்கேற்றபடி தானே கவனித்துக் கொள்ள வேண்டிய விஷயம். எல்லாரும் எல்லாக் காரியத்தையும் செய்துவிட முடியாதாகையால் மன ஊக்கத்தில் சிறியவர் களாயிருப்பவர்கள் அதில் பெரியவர்களாயுள்ளவர்களை அண்டித் துணையாகப் பேணிக்கொள்ள வேண்டும். ஆனால், சிறு மதியுடையவர்கள் அப்படிச் செய்யாமல் தமக்கே எல்லாம் தெரியுமென்று அகங்கரித்துப் பணிவு

தணிவில்லாமல் நடந்துகொள்வார்கள். உண்மையான மனப் பெருமை கர்வமில்லாமலிருக்கும். பிறருடைய குற்றத்தை விட்டுவிட்டு, குணத்தை மட்டும் பாராட்டும். ஆனால் போலிப் பெருமையுடைய சிறியவர்கள் அகங் காத்த செயல்களையே செய்வார்கள். பிறருடைய குணத்தைவிட்டுவிட்டுக் குற்றத்தையே தூற்றுவார்கள் என்பது இந்தப் 'பெருமை' என்ற அதிகாரத்தின் சாரம்.

இவைகளையெல்லாம் சேர்த்துச் சுருக்கமாகச் சொன்னால் இந்த அதிகாரம் சொல்லுவது எந்தக் காரியத்தையும் செய்து முடிக்கலாம் என்ற ஊக்க மிகுதியுள்ள மனப் பெருமை ஒவ்வொருவருக்கும் இருப்பது சிறப்புத் தரக் கூடியதுதான். ஆனால், அந்த ஊக்கமிகுதி வெறும் அகங் காரமாகிவிடாமல் அவரவருக்குள்ள அளவோடு இருக்க வேண்டும்—என்பதுதான்.

இப்போது அந்த முதற் குறளுக்கும் பொருள் என்னவென்பதைப் பார்ப்போம்.

> ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
> கஃதிறந்து வாழ்து மெனல்.

பத உரை: உள்ள வெறுக்கை ஒருவற்கு ஒளி; (ஆனால்) அஃது இறந்து வாழ்தும் எனல் இளி—ஊக்க மிகுதி ஒருவனுக்குச் சிறப்புண்டாக்குவது (தான் ஆனால்) அதை அளவுக்கு மீறிக் கொண்டு செலுத்தி வாழலாம் என்பது குற்றம்.

பொழிப்புரை: அரிய பெரிய காரியத்தையும் செய்து விடலாம் என்று மிகுந்த ஊக்கம் கொள்கிற மனப்பெருமை ஒருவனுக்குச் சிறப்புண்டாக்கக் கூடியது தான். ஆனால், அதை ஒருவன் தன்னுடைய அளவுக்கு மீறி நடத்திவிடமுடியும் என்று நினைப்பது குற்றம்.

இதுதான் திருவள்ளுவர் எண்ணிய உரை. இந்தக் குறளில் உள்ள 'அஃதிறந்து' என்பதற்கு 'அஃது இல்லா மல்' என்று பொருள் செய்துவிட்டதால் இந்த அதிகாரத் தின் நோக்கமே பயனற்றதாகிவிட்டது. 'இறந்து' என்ற பதத்திற்கு 'அளவு கடந்து' அல்லது 'எல்லை கடந்து' என்பதுதான் பொருள். 'இறந்து' என்பது

'செத்துப்போய்' என்று மரணத்தைக் குறிக்கிற போதும் அதற்கு 'ஆயுள் காலத்தின் எல்லை கடந்து' என்றுதான் பொருள். அதிலிருந்துதான் 'இல்லாமற் போய்' என்று மரணத்தைக் குறிக்கிற அர்த்தம் கொள்ளப்படுகிறது. ஆகையினால் 'அஃதிறந்து' என்பதற்கு 'அந்த உள்ள வெறுக்கை அளவு கடந்து' என்றுதான் பொருள் செய்யவேண்டும். இதே அதிகாரத்தின் ஏழாவது குறள்:

இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

என்பதிலுள்ள 'இறப்பே புரிந்த தொழிற்றும்' என்பதற்கு 'அளவுக்கு மீறியவற்றைச் செய்வதே வேலையாக இருக்கும்' என்றுதான் பரிமேலழகரும்—பொருள் செய்திருக்கிறார்.

இந்த 'ஒளியொருவற்குள்ள வெறுக்கை, இளி ஒருவற்கு அஃதின்றி வாழ்தும் எனல்' என்ற குறளுக்கு 'அரிய காரியங்களையும் செய்ய முடியும் என்ற ஊக்க மிகுதி இருப்பது ஒருவருக்குச் சிறப்புதான். ஆனால், அதைத் தன்னுடைய அளவுக்கு மீறிக்கொண்டு செலுத்த முடியும் என்று எண்ணினால் அது குற்றம்' என்பதுதான் திருவள்ளுவர் கருதிய பொருள் என்பதை, இதற்கு முன்னால் 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரத்தில்,

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு

என்ற குறள் உறுதிப்படுகின்றது.

இதன் பொருள்: ஊக்க முடைமைதான் ஒருவனுக்கு வல்லமை; அந்த ஊக்கம் இல்லாதவர்கள் மரங்களுக்கு ஒப்பானவர்களே. மனிதர்களாக இருப்பதுதான் வித்தியாசம்—என்பது. அதாவது மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் ஊக்கம் இருக்கவேண்டும். அதுதான் அவனுக்கு வல்லமை தருவது. ஊக்கம் இல்லாதவன் உணர்ச்சியில்லாத மரத்துக்குச் சமானம். மனித

வடிவத்தில் இருப்பது ஒன்றுதான் வித்தியாசம்—என்பது இதன் கருத்து.

இந்தக் குறளிலும் ‘உள்ள வெறுக்கை’ என்ற பதத்தைத்தான் பிரயோகப்படுத்தியிருக்கிறார். இங்கே ‘உள்ள வெறுக்கை’ இல்லாதவனை வெறும் ‘இல்லாதவன்’ என்று சொல்லுகிறார். குற்றமுள்ளவன் என்று சொல்லவில்லை. ஓரறிவுள்ள ஜீவனாகிய மரம் ஒன்றுக்குத் தான் காரியம் செய்யவேண்டுமென்ற ஊக்க உணர்ச்சி இருக்காது. இந்த உவமானத்தால் ‘ஊக்கமில்லாதவன் ஊக்கமில்லாத மரந்தான்’ என்கிறார். இந்தக் குறளையும் வைத்துக்கொண்டு பார்க்கிறபோது ‘ஒளியொருவற்கு உள்ள வெறுக்கை......’ என்ற குறளுக்கு ‘மனிதனுக்கு ஊக்கம் இருக்கத்தான் வேண்டும். ஆனால், அதை அவனவனுடைய சக்திக்குத் தக்கபடி அளவறிந்து செலுத்த வேண்டும். அளவுக்கு மீறிச் செலுத்த முயல்வது குற்றம்’ என்பதுதான் பொருள் என்பது உறுதியாகின்றது.

## பொதுமறை

திருக்குறளைப் ‘பொதுமறை’ என்று ஆன்றோர்கள் போற்றிவந்திருக்கிறார்கள். ஏன் என்றால் அது மனித வாழ்க்கையில் எல்லா நிலையிலும் உள்ள எல்லா மனிதருக்கும் நல்லறிவு சொல்லுகின்றது. ஜாதி, குலம், சமயம், நிறம், சடங்கு, சம்பிரதாயம் என்ற வேற்றுமைகளில் மயங்காத தூய அறிவைப் புகட்டுவதால், தமிழர்களல்லாத மற்றவர்களும் ஏற்றுக்கொள்ளத் தக்கது என்ற காரணத்தால் ‘பொதுமறை’ என்று புகழ்பெற்றது எனினும் பொருந்தும். பல மதத்தவர்களும் பல மொழிக் காரர்களும் ஒப்புக்கொள்ளத்தக்க பொதுமையுள்ளது என்பது எப்படி இருந்தாலும், சமுதாயத்தின் பல துறைகளிலும் இருக்கின்ற எல்லாருக்கும் பொதுவான அறங்களையும் அறிவுகளையும் திருக்குறள் போதிக்கின்றது என்ற பொதுத்தன்மை நிச்சயமானது. அப்படி எல்லா மக்களுக்கும் பொதுவாகச் சொல்லப்படுகிற அறிவைப் பல இடங்களில் அது சில குறிப்பிட்டவர்களுக்கு மட்டும்

சொல்லப்பட்டிருப்பது போல பரிமேலழகர் உரை செய்துவிட்டதால், திருக்குறளின் பரிபூரணப் பயனை பண்டிதர்களுக்கு அனுபவிக்க முடியவில்லை. எப்படி யெனில்:

மனித சமூகம் நல்ல முறையில் நடைபெற எல்லா மக்களும் கருதவேண்டிய முக்கியமான விஷயங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பகுதி களுக்குள் அடங்கிவிடும். அவற்றுள் 'அறம்' என்பது தனித்தனி மனிதனுடைய தினசரி வாழ்க்கையின் ஒழுக் கத்தைப் பற்றியது. அதில் 'இல்லறம்', துறவறம்' என்ற இரண்டு நெறிகள் உள்ளன.

அவற்றுள் 'இல்லறம்' என்பது மனைவிமக்களுடன் டும்ப வாழ்க்கை நடத்தி அன்பு குறையாமல் கடமை களைச் செய்தால் அதுவே மரணத்துக்குப் பிறகு நல்ல கதி கிடைக்கச் செய்யும் என்பது. 'துறவறம்' என்பது, குடும்ப வாழ்க்கையில் ஈடுபடாமல், எல்லா உயிர்ப் பிராணிகளிடத்தும் கருணையுடன் நடந்துகொண்டு, தன்னுடைய சரீர சுகங்களைப் பொருட்படுத்தாமல் ஆன்ம விசாரணை செய்து ஆண்டவனை உணர்ந்து மறுபடியும் உலகத்தில் பிறவாதிருக்க முயல்வது.

'பொருள்' என்பது மனித வாழ்க்கைக்கு இன்றி யமையாத எல்லாப் பொருள்களையும் வாங்குவதற்குக் கருவியாகக் கொள்ளப்படுகிற செல்வத்தைக் குறிப்பது. 'செல்வம்' என்பது பலவகைப்பட்ட உடைமைகளையும் உட்படுத்தும் என்றாலும் குறிப்பாகப் 'பணம்' என்ப தைக் குறிப்பதே பழக்கத்திலுள்ளது. இந்தச் செல்வம் என்ற பொருளைப் பற்றியும் அதைக்கொண்டு சமுதாயம் சரிவர நடப்பதற்கு அத்யாவசியமான பாதுகாப்பளிப்ப தற்கு வேண்டிய அரசன், அமைச்சு, படை, அரண் முதலியவற்றையும் சமுதாயத்திலுள்ள குடிமக்கள் நடந்துகொள்ளவேண்டிய முறைகளையும் விரிவாகச் சொல்லுவது 'பொருள்' பால். 'இன்பம்' என்பது ஆணும் பெண்ணும் கூடி அடைகின்ற காம—இன்பம் என்பதைப் பற்றிய உணர்ச்சிகளும் அவற்றை அனுபவிப்பதைப்

பற்றிய கற்பனைகளும். இந்த இன்பப் பகுதி 'களவு' என்றும் 'கற்பு' என்றும் இரண்டு பிரிவுகளாகச் சொல்லப்படுகிறது.

அவற்றுள் 'களவு' என்பது காமப் பருவமடைந்த ஒரு ஆண்மகனும் ஒரு பெண் மகளும் யாரும் அறியாத படி ஏகாந்தமாகச் சந்தித்து ஒருவரையொருவர் விரும்பிக் காம இன்பம் அனுபவிக்க இணங்குவது. 'கற்பு' என்பது அப்படித் தமக்குள் காதலர்களாகி விட்ட அவ்விருவருக்கும் பெற்றோரும் உறவினரும் கூடி மணம் செய்து வைத்து இல்லறம் தொடங்குவது.

'வீடு' என்பது, மனிதன் பிறப்பிலிருந்து 'விடு படுவது' அதாவது பிறந்துவிட்ட மனிதன் இந்தப் பிறப்புக்கான வாழ்க்கையை முடித்துக்கொண்டு இறந்து விட்டபின் மறுபடியும் பிறந்து உலக துன்பங்களில் சிக்கிக் கொள்ளாமல் இறைவனோடு சேர்ந்துவிடுவது என்ற விருப்பத்தை ஒட்டிய நம்பிக்கை. அது 'முத்தி' என்றும் 'மோக்ஷம்' என்றும் 'பகவானோடு இரண்டறக் கலத்தல்' என்றும் பலவிதமாகச் சொல்லப்படும். இந்த 'வீடு' என்பது வெறும் நம்பிக்கைதான். அந்த நம்பிக்கை ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவனுடைய மனதுக்குத் தக்கபடி வெவ்வேறு விதமாக இருக்கும். ஆதலால் அதைப் பொது முறையில் வரையறுத்துச் சொல்லவே முடியாது. திருவள்ளுவர் அந்த நம்பிக்கைக்குமட்டும் மதிப்புக் கொடுத்து அதைத் 'துறவறத்தில்' விட்டு விட்டு, அறம், பொருள், இன்பம் என்ற மூன்றைமட்டும் சொல்லுகின்றார்.

'வீடு' என்ற முத்தியைப்பற்றிய நம்பிக்கை உள்ள வர்களுக்கும் அந்த நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் பொதுவாக மனித சமுதாயம் நன்றாக நடைபெறுவதற்கு இன்றியமையாத நல்லொழுக்கங்களையும், அவற்றின் பாகுபாட்டையும் புகட்டுவதே திருக்குறளின் நோக்கம். 'வீடு' என்பதைப் பற்றிய நம்பிக்கை உள்ளவர்களுக் குள்ளேயும் 'துறவறம்' மேற்கொள்வோர் வெகு சிலரே யாக, 'இல்லறம்' நடத்துகின்றவர்களே மிகப்பெரும்

பகுதியினர். அதனுல் இல்லறத்தை ஒட்டியதான 'பொருட்பால்' என்ற பகுதியை மிகவும் விரிவாக எழுதி, சமுதாயம் நடைபெறுவதற்கு வேண்டிய எல்லா அறிவு களையும், அவ்வறிவுகளின் மூலே முடுக்குகளையும்கூட, வெகு நுணுக்கமாக ஆராய்ந்து விளக்குவது திறக்குறள்.

'இல்லறம்' என்பது ஒரு குடும்பத்தை மட்டும் தழுவியது. அதாவது கணவன், மனைவி, மக்கள், உறவினர்கள், விருந்தினர்கள் என்று அந்தக் குடும்பத் துக்குச் சம்பந்தப்பட்டவர்களை மட்டும் பற்றியது. அப்படி 'இல்லறம்' நடத்துகின்ற பல குடும்பங்கள் சேர்ந்தது ஒரு சமுதாயம். அப்படிப் பல சமுதாயங்கள் சேர்ந்தது ஒரு நாடு. ஒரு குடும்பத்துக்கு ஒரு தலைவன் இருப்பது போல ஒரு சமுதாயத்துக்கு ஒரு தலைவன் உண்டு. பல சமுதாயங்கள் சேர்ந்த ஒரு நாட்டுக்கும் ஒரு தலைவன் உண்டு. அந்த நாட்டுத் தலைவனே அரசன் என் பவன். குடும்பிகளுக்கெல்லாம் தலைக் குடும்பக்காரன் அரசன். ஆகையால், நாடாகிய குடும்பம் நன்ருக நடை பெறுவற்கு அதன் தலைவனுகிய அரசனுக்கு அறிவு சொல்லும் முறையில் 'பொருட் பால்' சொல்லப்பட் டிருக்கிறது. அதனுல் அரசு, அமைச்சு, அங்கம் என்ற மூன்று பகுதிகளாகப் 'பொருட்பால்' சொல்லப்படுகிறது. நாட்டுத் தலைவனுகிய அரசனுக்குச் சொல்லப்படுகிற நல்லறிவுகளில் பெரும் பகுதியும் வீட்டுத் தலைவனுகிய ஒவ்வொரு இல்வாழ்வானுக்கும் பொருந்துவதாகவே சொல்லப்பட்டிருக்கிறது. அரசனுக இருப்பவனுக்கு மட்டும் சொல்லப்படுகிற பகுதிகளைச் சிறிதும் சந்தேகத் துக்கு இடமில்லாமல் 'இறை', 'வேந்தன்', 'வேந்து' என்னும் பதங்களை வைத்தே சொல்லிவிடுகிருர் வள்ளுவர் பெருமான். அதைப் போலவே அரசனுடைய அமைச்ச ரைப் பற்றியும் அங்கங்களைப் பற்றியும் ஐயந்திரிபுகளுக்கு இடமில்லாத முறையிலேயே சொல்லுகிருர். அப்படிக் குறிப்பாகச் சொல்லப்படுகிற இடங்களைத் தவிர மற்றெல் லாம் எல்லா மக்களுக்கும் பொது அறிவாகவே சொல்லப் பட்டிருக்கின்றன. அதாவது 'இறைமாட்சி', 'செங் கோன்மை', கொடுங் கோன்மை', 'வெருவந்த செய்

யாமை', 'ஒற்றாடல்', 'அமைச்சு', 'தூது', 'மன்னரைச் சேர்ந்தொழுகல்', 'அரண்', 'படைமாட்சி', 'படைச் செருக்கு', 'பகை மாட்சி', 'பகைத்திறந் தெரிதல்' என்ற பதின்மூன்று அதிகாரங்களே அரசனுக்கும் அவனுடைய அமைச்சுக்கும் அங்கத்துக்கும் சம்பந்தப்பட்டவை. 'பொருட்பால்' 57 அதிகாரங்கள் கொண்டது. அவற்றுள் இந்த 13-ம் போக மற்ற 44 அதிகாரங்களும் பொது அறிவாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் உரையாசிரியர், 'பொருட் பால்' முழுதும் அரசனுக்கு மட்டும் சம்பந்தப்பட்டது போலக் கருதுவதாகத் தோன்றும்படி பல இடங்களில் இடையிடையே அரசனை இழுத்து வைத்துப் பொருள் செய்திருப்பதால் திருக்குறளறிவின் பொதுமைத் தன்மை மிகவும் பாதிக்கப்படுகிறது. அன்றியும் உரையிலும் குழப்பமுண்டாகிறது. அரசனுக்குச் சம்பந்தப்பட்டதாக மேலே சொல்லப்பட்ட 13 அதிகாரங்களிலும் பல குறள்கள் எல்லாருக்கும் பொதுவானவைகளாகக் கொள்ளுவதற்கு இடமிருக்க, எல்லாருக்கும் பொதுவாக வென்றே கருதப்பட்ட குறள்களையும் அரசனுக்கே சம்பந்தப்பட்டது போலப் பொருள் செய்வது 'பொதுமறை'யின் புகழுக்கு ஒத்ததல்ல.

பொருட் பாலில் சொல்லப்படுகிற அறிவு அரசனாக இருப்பவனுக்குத்தான் அதிக சம்பந்தமுடையது என்று நம் வணக்கத்திற்குரிய பேராசிரியராகிய பரிமேலழகர் கருதுகிறார். அவருடைய உரையிலுள்ள சொல்லாட்சி அவர் அப்படித்தான் கருதுவதாகத் தீர்மானித்துக் கொள்ள இடமுண்டாக்கி விட்டது. அதனால் அதை ஒட்டியே உரை போதிக்கும் பழக்கம் உண்டாகி விட்டது. மேற்சொன்ன தீர்மானத்துக்கு இடமுண்டாக்கி விடுகிற சொல்லாட்சியையும் உரைகளையும் சிறிது சோதிப்போம்.

பொருட் பாலுக்கு உரை சொல்லப் புகுமுன் அதனை அறிமுகப்படுத்தும் முறையில் பரிமேலழகர் சொல்வதாவது :

"இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவா

னெடுத்துக் கொண்டார். அது தன் துணைக்காரணமாய் அரசனீதி கூறவே அடங்கும். அரச னீதியாவது காவலை நடாத்து முறைமை. அதனை 'அரசியல்', 'அங்கவியல்', 'ஒழிபியல்' என மூவகைப்படுத்தி, மலர்தலை யுலகுக் குயிரெனச்சிறந்த அரசன தியல்பு இருபத்தைந்ததிகாரத் தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் 'இறை மாட்சி' கூறுகின்றார்'' என்பது.

இதற்கு விளக்கமாக எதைச் சொன்னாலும், இதைப் படிக்கும் சாதாரண மனிதர்களுக்கு அரசியலில் சொல்லப் படுகிற இருபத்தைந்து அதிகாரங்களும் 'அரசன தியல்பு' என்று அரசனுக்குச் சம்பந்தப்பட்டதாகத்தான் நினைப்பார்கள்.

மேலும், 'இறை மாட்சி' என்ற அதிகாரத்துக்குப் பொருள் சொல்லி முடித்துவிட்டு, அதற்கு அடுத்த அதிகாரமாகிய 'கல்வி' என்பதற்கு உரை சொல்லப் புகு முன் 'இறைமாட்சிக்கும் 'கல்விக்'கும் தொடர்பு காட்டும் முறையில் :

''அஃதாவது, அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல் களைக் கற்றல். அவையாவன : அறநூலும், நீதிநூலும், யானை, குதிரை, தேர், படைக்கலமென் றிவற்றின் நூல் களும் முதலாயின. அரசன் அறிவுடைய னாயக்கால் தன்னுயிர்க்கே யன்றி மன்னுயிர்க்கும் பயன்படுத லானேக்கி, இஃது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதி பயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்றார். மேல் 'தூங்காமை கல்வி' எனத் தோற்று வாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃது 'இறைமாட்சி'யின் பின் வைக்கப்பட்டது''— என்று சொல்லுகின்றார்.

இதில் 'கல்வி' எல்லா மனிதர்களுக்கும் இன்றியமை யாதது என்ற பொதுமை இரண்டாம் பட்சமாக்கப்பட்டு அரசனாக இருப்பவனுக்குக் கல்வி வேண்டும் என்பதற்கு முக்கியத்வம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது திருவள்ளு வருடைய கருத்துக்கு ஒரு சிறிதும் ஒவ்வாது. ஏன் எனில் இந்தக் 'கல்வி' என்னும் அதிகாரத்தில் அரசனைப்

பற்றிய பேச்சுக்கோ, அவன் கற்கவேண்டிய அற நூல், நீதி நூல், யானை, குதிரை, தேர், படைக்கலம் முதலி யவைகளைப் பற்றிய நூல்களைப் பற்றிய எண்ணத்திற்கோ துளி கூட இடமில்லை. இந்த அதிகாரத்தில் சொல்லப் படுவது முற்றிலும் மனிதனுக்கு 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்ற ஒன்றைப் பற்றித்தான். அரசன் கற்கவேண்டிய கல்விகளைப் பற்றி 'இறை மாட்சி'யில் :

> தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
> நீங்கா நிலனாள் பவற்கு

என்பதிலுள்ள 'கல்வி'யில்தான் பொருள் கொள்ள வேண்டும்.

இந்தக் குறளிலுள்ள 'கல்வி'யைக் 'கல்வி' என்று அதிகாரத்தில் சொல்லப்படுகிற கல்விக்குத் தோற்றுவா யாகக் கொள்வது தவறு. 'கல்வி' என்ற அதிகாரத்தில் சொல்லப்படுகிற கல்வி அரசனுக்குச் சம்பந்தப்பட்டது அல்லவென்பதை உடனே பார்த்துவிட அதிலுள்ள பத்துக் குறள்களும் இதோ இருக்கின்றன.

(1) கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.

(2) எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(3) கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(4) உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(5) உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(6) தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

(7) யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(8) ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(9) தாமின் புறுவ துலகின் புறங்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(10) கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

இவற்றுள் ஒன்றிலாவது அரசனைக் கூட்டிப் பொருள் சொல்ல இடமில்லை.

பொருட்பாலில் உள்ள அதிகாரங்களில், ஒரு அதிகாரத்துக்கும் அதற்கு அடுத்த அதிகாரத்துக்கும் தொடர்பு காட்டும் முறையில், ஏன் இந்த அதிகாரம் முன்னைய அதிகாரத்துக்குப் பின் வைக்கப்பட்டிருக் கிறது என்று ஆசிரியர் காரணம் கற்பிக்கிறார். அந்தத் தொடர்ச்சியைக் கவனிக்கிறபோதும் பொருட்பாலில் உள்ள அனைத்தும் அரசனுக்குச் சம்பந்தப்பட்ட அறி வென்றே ஆசிரியர் கருதுவதாகத் தெரிகிறது.

அப்படிக் கருதிவிட்டதனால் அதற்கிணங்க உரை செய்யவேண்டிய நிர்ப்பந்தத்தை உண்டாக்கிக்கொண்டு பல குறள்களுக்குத் திருவள்ளுவருடைய கருத்துக்குச் சிறிதும் பொருந்தாத உரைகளையும் சில இடங்களில் முற்றும் விரோதமான உரைகளையும் செய்துவிட நேர்ந் திருக்கிறது.

அப்படிப்பட்ட தவறான உரைகள் சொல்லப்பட் டிருக்கிற சில உதாரணங்களைப் பார்ப்போம்:

(1) அரசியலில் 'தெரிந்து செயல்வகை' என்ற அதி காரம் இருக்கிறது. இந்த அதிகாரம், எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதனால் விளையக்கூடிய நன்மை தீமைகளைத் தீர ஆராய்ந்துகொண்டு அதன் பிறகுதான் செய்யப் புக வேண்டும் என்பதைப் பற்றிச் சொல்வது. இந்த அதிகாரத்தின் முதற் குறள்:

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

என்பது. இதன் கருத்து: (ஒரு காரியம் செய்யப் புகுமுன் அதனால் உண்டாகக்கூடிய) நஷ்டத்தையும் இலாபத்தையும் அந்தக் காரியம் முடிவடைந்த பின்னால் வரக்கூடிய நன்மை தீமைகளையும் ஆராய்ந்து அறிந்தபின் அதைச் செய்ய வேண்டும்—என்பது.

இந்த அதிகாரத்தின் முக்கியமான ஒரு குறள்:

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

என்பது. இதன் பொருள்: இலாபத்துக்கு ஆசைப்பட்டு முதலை இழந்துவிடக்கூடிய காரியத்தை அறிவுடையவர்கள் செய்யத் தொடங்கமாட்டார்கள் என்பது.

இதில் இன்னும் முக்கியமான குறள்:

எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

என்பது. இதன் பொருள்: (எந்தக் காரியத்தையும்) ஆராய்ந்து ஆரம்பிக்கவேண்டும். ஆரம்பித்துவிட்டுப் பின்னால் ஆராய்ந்து கொள்ளலாம் என்பது குற்றம்—என்பது.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தமது விசேட உரையில் முற்றிலும் வேண்டாத பல விஷயங்களை விரித்து, இந்தக் குறள் அரசன் தன்னுடைய பகைவரை வெல்லுவதற்கான உபாயங்களை ஆராய்ந்தபின் காரியத்தைத் தொடங்க வேண்டும் என்பதற்காகச் சொல்லப்பட்டதாகப் பொருள் செய்கிறார். அவர் தமது உரையில் சொல்லுவதாவது:

பத உரை :—செய்யத்தக்க கருமமும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் தொடங்குக தொடங்கி வைத்துப் பின் எண்ணக்கடவேமென் றெழிதல் குற்றமாதலான்.

விசேட உரை :—துணிவு பற்றி நிகழ்தலின், துணிவெனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உபாய மென்பது அவாய்நிலையான் வந்தது. அது, (அவ்

வுபாயம்) கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறு படுத்தல், ஒற்றுதல் என நால்வகைப்படும். இவற்றை வடநூலார் தான, சாம, பேத, தண்ட மென்ப. அவற்றுள் முன்னைய விரண்டும் ஐவகைய; ஏனைய மூவகைய; அவ்வகையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். இவ்வுபாய மெல்லாம் எண்ணாது தொடங்கின் அவ்வினை மாற்றாரால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையி னொழிதலாகாமை யானும், அரசன் துயருறுதலின், அவ் வெண்ணாமையை 'இழுக்'கென்றார். செய்வனவற்றை யும் உபாயமறிந்தே தொடங்குக வென்பதாம்.

இந்த விசேட உரையால் இந்தக் குறள் அரசனுக்கே சொல்லப்பட்டதாகி மற்றவருக்குப் பயனற்றதாக்கப் படுகிறது.

(2) 'பொச்சாவாமை' என்ற அதிகாரம், யாரும் சுகபோகங்களில் மயங்கித் தம்முடைய கடமைகளை மறந்து விடக்கூடாது என்ற அறிவைப் பொதுவாக எல்லாருக்கும் புகட்டுவது. இந்த அதிகாரத்திலுள்ள எந்தக் குறளிலும் அரசனைக் குறிக்கக்கூடிய சொல்லே இல்லை. 'பொச்சாவாமை' என்பது என்ன என்று அதன் இலக்கணம் சொல்வது போன்ற முதற் குறள்:

> இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
> உவகை மகிழ்சியிற் சோர்வு.

என்பது. இதன் பொருள்: சிறந்த இன்பங்களை அனுபவிக்கும் மகிழ்ச்சியினால் தன் கடமைகளை மறந்து விடுவது, மிகுந்த கோபத்தை விடத் தீங்குண்டாக்குவது என்பது. அதாவது ஒருவன் தன்னுடைய இன்பங்களில் மயங்கிக் கடமைகளை மறந்துவிடுவது, அவன் அளவு கடந்த கோபங் கொண்டுவிட்டால் என்ன தீமையை உண்டாக்கிவிடும் என்பது. இதில் அரசனைச் சம்பந்தப் படுத்த இடமில்லை.

ஆனால் பரிமேலழகர் இதற்குப் பதவுரை சொல்லும் போது, மிக்க உவகைக் களிப்பான் வரும் மறவி, அரச னுக்கு அளவிறந்த வெகுளியினும் தீது—என்று இதில் அரசனைக் கூட்டுகின்றார்.

அதுமட்டுமல்லாமல் அவர் இந்தக் குறளுக்குத் தரும் விசேடஉரை: மிக்க உவகை பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதம் என்றிவற்ருன் வருவது. அளவு பகைவரை யடர்த்தற்கும் கொடியோரை ஒறுத்தற்கும் வேண்டுவது. 'இறந்த வெகுளி' ஒரோ வழிப் பகைவரையுங் கொல்லும்; இஃதன்றித் தன்னையே கோறலின். அதனினுந் தீதாயிற்று—என்பது. இது முற்றிலும் இங்கு வேண்டாத விஷயம் இந்த அதிகாரம் அரசனைமட்டும் கருதிச் சொல்லப்பட்டிருப்பதாகக் கொண்டுவிட்டதால் இந்தக் குழப்பம்.

(3) 'கண்ணோட்டம்' என்னும் அதிகாரம், மனிதனுக்கு மனிதன் தாட்சண்யம் காட்டவேண்டும் என்றதைப் புகட்டுவது. இந்த அதிகாரத்தின் முதற்குறள்:

> கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
> யுண்மையா னுண்டிவ் வுலகு

என்பது. இதன் பொருள்: தாட்சண்யம் என்கின்ற மிக நல்ல குணம் இருப்பதால்தான் உலகம் இருக்கிறது. அதாவது, ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்துத் தாட்சண்யம் காட்டுவது என்ற மிக நல்ல குணம் மக்களுக்குள் இருப்பதனுல்தான் உலக வாழ்க்கை நடைபெற்று வருகின்றது—என்பது.

இந்தக் குறளில் உள்ள எந்தப் பதமும் இதில் அரசனைச் சம்பந்தப்படுத்த இடங்கொடுக்காது. இந்த அதிகாரத்திலுள்ள மற்றக் குறள்களிலும் அப்படிப்பட்ட இடமில்லை. இந்தக் குறளிலுள்ள 'உலகு' என்ற பதம் இந்தக் குறள் உலக மக்களுக்கெல்லாம் பொதுவாகச் சொல்லப்படுவது என்பதை வலியுறுத்தும்.

ஆனுல் இந்தக் 'கண்ணோட்டம்' என்ற நற்குணம் அரசனுக்கு மட்டுந்தான் சொல்லப்படுவது போலக் கொண்டுவிட்டதால் இதற்குப் பரிமேலழகர் சொல்லும் உரை என்னவெனில்: கண்ணோட்டம் என்று சொல்லப் படுகிற சிறப்புடைய அழகு அரசர்மாட்டு உண்டாகலான் இவ்வுலகம் உண்டாகாநின்றது. இது பதவுரை. இதற்கு

விளக்கமாக: (இந்தக் கண்ணேட்டம் அரசனிடம்) இன்மை வெருவந்த செய்தலாகலின் அவர்நாட்டு வாழ் வார் புலியை அடைந்த புல்வாயினம் போன்று ஏமஞ் சாராமைபற்றி, இவ்வுலகுண் டென்றூர்—என்பது விளக்கம். இந்த விளக்கமும் பதவுரையும் சேர்ந்து என்ன பொருளாகிறதென்றுல், 'தாட்சண்யமென்னும் சிறப் புடைய குணம் அரசனிடத்தில் இருப்பதனுல்தான் உலகம் நடந்து வருகிறது. அரசனிடத்தில் அது இல்லா விட்டால் அந்நாட்டு மக்கள் புலியிடத்திற் சிக்கிய மானினம்போல அவதிப்படுவார்கள் என்பது. இது மிகவும் தவருனது. அரசனுடைய தாட்சண்ய குணத் தால்தான் மக்கள் வாழ்ந்து வருகிருர்கள் என்று பொருள் படச் செய்வது எந்த நியாயத்துக்கும் பொருந்தாது. குடிமக்களுடைய தாட்சண்யத்தால் அரசன் இருந்து வருகிருன் என்று சொன்னுலும் சொல்லலாமேயன்றி அரசனுடைய தாட்சண்யத்தால் குடிகள் இருந்து வரு கிருர்கள் என்று சொல்ல முடியாது. ஒருக்கால் அரச னுக்குத் தாட்சண்ய குணம் இருக்கவேண்டும்; அது இருந்தால்தான் குடிகள் சுகமாக இருப்பார்கள் என்பது சொல்லப்படுகிதோ என்றுல் அதற்கும் இங்கே இட மில்லை. அத்துடன் அரசனுக்குச் சொல்லவேண்டிய நல்லறிவு முழுதும் 'செங்கோன்மை,' 'கொடுங் கோன்மை,' 'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரங் களில் சொல்லப்பட்டு விட்டபடியால் இங்கே அரசனுக் கென்று சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. அதனுல் 'வெருவந்த செய்யாமை'யைப் பற்றி இங்கே பேசுவதும் பொருந்தாது.

பொருட்பாலில் சொல்லப்படுவதெல்லாம் அரசனுக்கு மட்டும் போலப் பொருள் செய்யப் புகுந்ததால் இந்தக் குழப்பம்.

(4) 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரம் மனிதருக்கு மனவலிமைதான் உண்மையான வலிமை என்பதைப் பற்றிச் சொல்லுவது. இந்த அதிகாரத்திலுள்ள பத்துக் குறள்களும் சொல்வது என்னவெனில்:

(1) மனவலிமை என்ற உடைமைதான் உண்மையான உடைமை. அந்த உடைமை இல்லாதவர்களுக்கு வேறு எந்த உடைமைகள் இருந்தும் பயனில்லே.

(2) மனவலிமை என்ற உடைமை எப்போதும் நம்மைவிட்டு நீங்காதிருக்கக்கூடிய செல்வம்; பணச் செல்வம் என்ற உடைமை நிலேயற்றது.

(3) உண்மையான மனவலிமை என்ற செல்வத்தை உடையவர்கள் தமக்குள்ள பணச் செல்வத்தை இழந்துவிட்டாலும் அதனுல் சோர்வடைந்துவிட மாட்டார்கள்.

(4) உண்மையான மனவலிமை உடையவனேத் தேடிக்கொண்டு மீண்டும் பணச் செல்வம் அவனிடம் வந்து சேரும்.

(5) தண்ணீர் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் அதிலுள்ள தாமரைச் செடியின் தண்டும் உயரும். அதுபோல் மனவலிமை எந்த அளவுக்கு ஒரு மனிதனிடத்தில் உயர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் அவனுக்குச் சிறப்புக் கிடைக்கும்.

(6) ஆனுல் இந்த மனவலிமை என்பது, உயர்வான நல்ல காரியங்களுக்காக மனவலிமை கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியதுதான். ஏன் என்ருல் மற்ற சாதாரண ஆசாபாசங்களுக்கான காரியங்களுக்கு மனவலிமை வேண்டுமென்பதில்லே. அவை விலக்கினுலும் விலகாத இயல்புடையவை.

(7) ஒரு யானே தன் உடலில் அம்பு பாய்ந்துவிட்டால் பின் வாங்காமல் பின்னும் எதிர்த்து முன்னேறும். அதுபோல மன வலிமை உடையவர்கள் ஒரு தோல்வி யடைந்துவிட்டாலும் பின்வாங்க மாட்டார்கள்.

(8) உலகத்தில், ஒரு நல்ல காரியத்தைச் செய்தோம் என்ற பெருமையை மனவலிமை இல்லாதவர்கள் அடைய மாட்டார்கள்.

(9) ஒரு யானே மிகப் பெரியதாகவும் கூரிய தந்தங்களே யுடையதாகவும் இருந்தாலும் அதைவிட மிகச்

சிறியதான புலிக்குப் பயந்துவிடுகிறது. (மனவலிமைக் குறைவினால்).

(10) (அதனால்) ஒருவனுக்கு வலிமை என்பது மன வலிமைதான். அது இல்லாதவர்கள் மனமில்லாத மரத்துக்குச் சமானம். மக்களல்ல.

இவற்றுள் ஒன்றாவது அரசனுக்கென்று சொல்லப் பட்டதல்ல. இந்தப் பத்துக் குறள்களிலுள்ள எந்தப் பதமும் அரசனுக்குச் சம்பந்தப்பட்ட பொருள் தருவ தல்ல.

ஆனால் இந்த அதிகாரத்தின் 6-வது குறளுக்குப் பரிமேலழகர் உரையில் அரசனைப் புகுத்துகிறார்.

அந்தக் குறள்:

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

இதற்குப் பரிமேலழகரின் பதவுரை: அரசராயினார் கருதுவதெல்லாம் தம் உயர்ச்சியையே கருதுக; அவ் வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லை யாயினும், அக் கருத்துத் தள்ளாமை நீர்மை யுடைத்து--என்பது.

இந்த உரை படிப்பவர்களுக்கு விளங்காது. இதற்குப் பண்டிதர்கள் வெகு பாடுபட்டுச் சுற்றி வளைத்து வேண் டாததையெல்லாம் விரித்து ஒருவாறு சமாதானம் சொல்லிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

இதற்கு விளக்கமாகப் பரிமேலழகர் சொல்லி யிருக்கும் விசேட உரை பின்னும் குழப்பமுண்டாக்கு கிறது. அந்த் விசேட உரை: தள்ளிய வழியுந் தாளாண்மையிற் றவறின்றி நல்லோராற் பழிக்கப்படா மையின், தள்ளாவியற்கைத் தென்பதாம். மேல் 'உள்ளத் தனைய துயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு.

இந்த உரையையும் விசேட உரையையும் வைத்துக் கொண்டு பண்டிதர்கள் அவரவர்களுடைய யுக்திக்கும் திறமைக்கும் தக்கபடி சமாதானம் சொல்லலாம். ஆனால்

அவர்களும்கூடப் பரிமேலழகர் இந்தக் குறளுக்கு என்ன தான் சொல்லுகிருர் என்று உறுதியாகச் சொல்ல முடிய வில்லை.

இத்தனை சங்கடமும், இது அரசனைப் பற்றிச் சொல் லப்பட்டிருப்பதாக எண்ணிக்கொண்டதால் ஏற்பட்ட தன்றி வேறில்லை.

இந்தக் குறளை பரிமேலழகர் கொண்டுவிட்டபடி 'அரசராயினுர்' என்பவருக்கு மட்டும் அல்லாமல், எல்லா மனிதருக்கும் பொது அறிவாகத்தான் வள்ளுவர் வைத்திருக்கிருர். அந்த முறையில் பொருள் செய்தால் இந்தக் குறள் எல்லாருக்கும் வேண்டியதான மிக நல்ல அறிவு தருகின்றது. அதாவது:

> உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
> தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

இதற்குப் பதவுரை: உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்=மன வலிமை வேண்டும் என்பதெல்லாம் உயர்வான நல்ல காரியத்தை எண்ணுவதில்தான்; மற்றது—(நல்ல காரியம் அல்லாத) மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து—விலக்கினுலும் விலகாத இயல் புடையது என்பது.

இதற்கு விரிவுரை மன வலிமையோடு துன்பம் வந்தாலும் தளர்ந்துவிடாமல் எண்ணவேண்டுமென்ப தெல்லாம் உயர்ந்த நல்ல காரியத்தைச் செய்து முடிக் கத்தான். மற்றபடி (ஐம்புல ஆசைக்களுக்காகச்) சாதாரணமாகச் செய்யப்படுகிற காரியத்துக்கு மன உறுதி என்பது வேண்டியதில்லை. ஏனெனில் தினசரி வாழ்க்கையில் செய்யக்கூடிய காரியங்களைப்பற்றிய ஆசைகள் இயற்கையாகவே நம்மோடு ஒட்டிக்கொண் டிருப்பவை. அவற்றை விலக்கினுலும் விலகுவதில்லை. அப்படிப்பட்ட ஒரு காரியத்தைச் செய்ய மன வலிமை வேண்டும் என்ற போதனை வேண்டியதில்லை என்பது.

(5) இதே அதிகாரத்திலுள்ள 8-வது குறள்:

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு,

என்பது. இந்தக் குறளிலுள்ள பதங்களுக்கு நேரான பொருள்: உலகத்தில், மனவலிமை இல்லாதவர்கள் புகழுடையேம் என்று மகிழும் பெருமையடைய மாட்டார்கள் என்பது.

இதை விரித்துரைத்தால்: உலகத்தில் மனவலிமை இல்லாதவர்கள் நல்ல காரியங்களைச் சாதித்துப் புகழ் அடைந்ததில்லை. அதனால் புகழ்தரக்கூடிய நல்ல காரியங்களைச் செய்ய மனவலிமை வேண்டும். இல்லாவிட்டால் புகழடைந்த பெருமை வராது—என்று பொருள் தருகின்றது.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் உரை: ஊக்கமில்லாத அரசர் இவ்வுலகத்தாருள் யாம் வன்மையுடையேமென்று தம்மைத்தாம் மதித்தலைப் பெறார்.

இதற்கு விளக்கம்: ஊக்கமில்லையாகவே, முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இலவாமாகலின் 'செருக்கெய்தார்' என்றார். கொடை, வென்றியினாய இன்பம் தமக்கல்லது பிறர்க்குப் புலனாகாமையின் தன்மையாற் கூறப்பட்டது—என்பது.

இந்தக் குறள் அரசனைப் பற்றியது என்று கொண்டுவிட்டதால் இதில், பொருள், கொடை, வெற்றி என்பனவற்றை வலிந்திழுத்துக் கூட்ட வேண்டியதாகிவிட்டது. அதனால் இதன் பொதுத்தன்மை மறந்துவிடுகிறது.

(6) 'சொல்வன்மை' என்பது அங்கவியல் பகுதியில் இரண்டாவது அதிகாரம். 'அமைச்சு' என்பது முதல் அதிகாரம். 'சொல்வன்மை' என்ற அதிகாரம் வெறும் 'பேச்சுத் திறமை' என்பதைப்பற்றி மட்டும் சொல்வது. எவர் யாரோடு எதைப் பேசினாலும் நாக்கை அடக்கிக் குற்றமான வார்த்தைகளைச் சொல்லிவிடாமல் கேட்பவர்கள் விருப்பத்தக்க முறையில் பேச வேண்டும் என்பதைப் புகட்டுவது. இது எல்லாருக்கும் பொது

வாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதை இந்த அதிகாரத்திலுள்ள பத்துக் குறள்களிலும் உள்ள பதங்களே காட்டும். ஆனால், இந்த அதிகாரம் 'அங்க வியல்' என்ற பகுதியில் இருப்பதனாலும் 'அமைச்சு' என்ற அதிகாரத்தை அடுத்து நிற்பதனாலும் 'சொல் வன்மை' என்பது அமைச்சருக்கு மட்டும் வேண்டியது போலப் பொருள் கூறப்பட்டிருக்கிறது.

இந்த அதிகாரத்திற்கு முன்னுரையாகப் பரி மேலழகர் சொல்லுவதாவது: அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சியல் நடத்தற்கேதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் 'ஒருதலையாச் சொல்லலும் வல்ல' தென்றனையே சிறப்புப்பற்றி விரித் துரைக்கின்றமையின், இஃது 'அமைச்சி'ன் பின் வைக்கப் பட்டது—என்பது.

இந்த முன்னுரை, 'சொல்வன்மை' என்பது ஒரு மந்திரி தன்னுடைய மந்திரித்தனத்தை ஒட்டிப் பேச வேண்டிய பேச்சுத் திறமையைப் பற்றியது என்பது தீர்மானிக்கப்படுகிறது. அதனால் இந்த அதிகாரத்தி லுள்ள குறள்களுக்குச் சொல்லப்படும் உரைகளில் பொருத்தமில்லாத பல விஷயங்களைப் புகுத்தவேண்டிய தாகிவிட்டது.

இந்த அதிகாரத்தின் முதற் குறள்:

நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று

என்பது. இதற்குப் பரிமேலழகர் தந்துள்ள உரையாவது அமைச்சர்க்கு இன்றியமையாக் குணமாவது சான்றோ ரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத் தினை உடையராதல்; அந்நலம் பிறர்க்கும் பிறநலமெல்லா வற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்கதாகலான்—என்பது.

இந்தக் குறளிலுள்ள எளிய பதங்கள் வெகு தெளி வான பொருள் தருகின்றன. கொண்டு கூட்டிப்பொருள் செய்யவேண்டிய வேலையே இல்லை. 'நாக்குப் பதனமாக இருப்பதைப் போல் நன்மை செய்யக்கூடியது வேறு

எதுவுமல்ல' என்பதுதான் இதன் அர்த்தம். இதில் மந்திரியை இழுத்துக் கூட்டியது திருவள்ளுவர் எண்ணாத விஷயம். இந்த அதிகாரம் மந்திரிக்கு வரவேண்டிய 'சொல்வன்மை' என்று கொண்டுவிட்டதால் மந்திரியை இழுக்க வேண்டியதாயிற்று. அப்படி மந்திரியைக் கூட்டியும், இது மந்திரிக்காகத்தான் சொல்லப்பட்டிருக்கிறது என்று சொல்லிவிட முடியாமல், 'அந்நலம் பிறர்க்கும் பிறநலமெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்கதாகலான்' என்று சேர்க்கவேண்டியதாயிற்று. மேலும் இதன் விசேட உரையில் "இந்நலம் உலகத்தைத் தன் வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேருக வேண்டுமென்றும் நீதிநூல் வழக்குப்பற்றி 'நாநல மென்று நலன்' என்றும், பிறர்க்கும் இதுபோற் சிறந்தது பிறிதின்மையான் 'அந்நலம் யாநலத்துள்ளதூஉ மன்று' என்றுங் கூறினர். பிரித்தல், பொருத்தல் முதலிய தொழில் இல்லாதார்க்கும் இஃது இன்றியமையாததாய பின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ என்பது கருத்து" என்று சொல்லப்படுகிறது. இத்தனையும் இந்த அதிகாரம் அமைச்சருக்கே சொல்லப்பட்டதாகக் கொண்டுவிட்டதனுல் உண்டான குழப்பம்.

இதற்கு அடுத்த குறள்:

ஆக்கமுங் கேடும் அதனுல் வருதலால்
காத்தோமபல் சொல்லின்கட் சோர்வு

என்பது. இதற்கு இதிலுள்ள பதங்கள் தருகின்ற பொருள்: நன்மையும் தீமையும் சொல்லினுல் வருவதால் சொல்லுகிற சொல் குற்றமில்லாததாக இருக்கவேண்டும் என்பதை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ள வேண்டும்—என்பது.

இது எல்லா மக்களுக்கும் பொது அறிவாகச் சொல்லப்பட்டிருப்பது மிகவும் தெளிவாகத் தெரிகிறது. ஆனுல், இதற்குப் பரிமேலழகர் உரை என்னவெனில்: தம்மரசற்கும் அங்கங்கட்கும் ஆக்க அழிவுகள் தம் சொல்லான் வருமாகலான் அப் பெற்றித்தாய

சொல்லின்கட் சோர்தலை அமைச்சர் தம்கண் நிகழாமல் போற்றிக் காக்க—என்பது.

இந்த உரை, இந்த வெகு நல்ல குறளைப் பொது மக்களுக்குப் பயனற்றதாக்கி விடுகிறது. மேலும் முந்திய குறளுக்கு உரை சொன்னதில், நாநலம் என்பது 'பிறர்க்கும் இதுபோற் சிறந்தது பிறிதில்லை' என்று, அமைச்சரோடு பொதுமக்களையும் இராண்டாம் பட்சமாகவாவது சேர்த்துச் சொல்லப்பட்டது. ஆனால், இந்தக் குறள் முற்றிலும் அமைச்சரைக் கருதியே சொல்லப்பட்டதாக இதன் விசேட உரையில் சொல்லப்படுகிறது. அந்த விசேட உரை: பிறர் சோர்வு போலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருவதால், 'காத்தோம்பல்' என்றார்—என்று விசேட உரை சொல்லுகிறது. இதன் கருத்து: மற்றவர்களுடைய பேச்சு குற்றமில்லாமலிருக்க வேண்டும் என்பது அவ்வளவு காத்து ஓம்பவேண்டிய விஷயமல்ல. மந்திரியின் சொல்லில்தான் குற்றமில்லாமலிருப்பது காத்து ஓம்பப்படவேண்டும். ஏனென்றால், நாட்டிலுள்ள மக்களுக்கெல்லாம் ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்—என்பது விசேட உரை. இதனால் இந்தக் குறள் அமைச்சர்க்கென்றே சொல்லப்பட்டிருப்பதாகக் கருதப்பட்டிருக்கிறது. அது திருவள்ளுவருடைய கருத்துக்கு ஒரு சிறிதும் ஒவ்வாது. அன்றியும் திருக்குறள் 'பொதுமறை' என்ற பெருமைக்கும் பொருந்தாது.

(7) 'வினைத்தூய்மை' என்ற அதிகாரமும் அங்கவியலிலுள்ளது. 'வினைத்தூய்மை' என்றால் செய்கிற காரியம் குற்றமற்றதாக இருக்கவேண்டும் என்பது. இந்த அதிகாரத்திலுள்ள பத்துக் குறள்களிலும் பொதுமக்களைக் குறிக்கும் பதங்களே பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. இந்த அதிகாரம் அரசனுக்கென்றோ அமைச்சனுக்கென்றோ சொல்லப்பட்டது அல்லவென்பதற்கு இதில் நடுநாயகம் போலுள்ள

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை

என்ற குறளே போதுமான ஆதாரம். இதன் பொருள்: பெற்ற தாய் பசியால் வாடுவதைக் கண்டு அவளுடையு

பசியைத் தீர்ப்பதற்காளுலும்கூட, மேலோர்கள் பழியானவைகள் என்று சொல்லும் குற்றமான காரியத்தைச் செய்யக்கூடாது—என்பது.

இந்த அதிகாரத்தின் இரண்டாவது குறள்:

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை

என்பது. இதன் பொருள்: புகழோடு கூடிய நன்மை உண்டாக்காத காரியத்தை எப்போதும் நீக்கவேண்டும்—என்பது. அதாவது, எந்தக் காரியத்தைச் செய்வதாளுலும் அது பிறர் மெச்சிப் புகழக்கூடிய நன்மை பயக்கும் காரியமாக இருக்கவேண்டும். அப்படிக் கல்லாத எந்தக் காரியத்தையும் எப்போதும் விலக்கவேண்டும்—என்பது. இந்தக் குறள் 'வினைத்தூய்மை என்பதற்கு இலக்கணம் சொல்லுவது. இந்த வினைத் தூய்மை அரசன் முதல் ஆண்டி வரைக்கும் எல்லா மனிதர்களுக்கும் வேண்டிய பொது அறிவாகத்தான் திருவள்ளுவர் கருதியிருக்கிறுர்.

ஆளுல், இந்தக் குறள் 'அங்கவியல்' என்ற பகுதியில் இருப்பதால் இது அமைச்சனுக்குச் சொல்லப்பட்டதாகக் கொண்டுவிட்டதால் பரிமேலழகர் இதற்குச் சொல்லுகின்ற உரை பொதுமக்களுக்குப் பயனற்றதாகிவிடுகிறது.

அவர் சொல்லும் உரை: தம் அரசனுக்கு இம்மைக்கண் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை அமைச்சர்க்கு எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்—என்பது.

இதில் அமைச்சனைப் புகுத்தியதோடு அரசனையும் இழக்கவேண்டியதாகிவிட்டது. அத்துடன் அரசனுக்கு இம்மைக்கண் புகழும் மறுமைக்கண் அறமும் கிடைக்கக் கூடிய காரியத்தை அமைச்சன் செய்யவேண்டும் என்பது போல் நினைக்கச் செய்கிறது.

(8) 'வினைசெயல்வகை' என்ற அதிகாரமும் அங்கவியலில் உள்ளது. 'வினைத்தூய்மை', 'வினைத்திட்பம்,' 'வினை செயல்வகை' என்ற வரிசையில் மூன்ருவதாக வைக்கப்பட்டுள்ளது. இந்த வரிசையால் ஒருவன் செய்யு

நினைக்கும் காரியம் பழி பாவங்கள் இல்லாத குற்றமற்ற தாக இருக்கவேண்டும் என்பதை ஆலோசிக்க வேண்டும் என்பதை 'வினைத்தூய்மை' என்ற அதிகாரம் கற்பிக் கிறது. அப்படி ஆலோசித்துக் குற்றமற்ற காரியம் என்று தெரிந்துகொண்டபின் அக்காரியத்தை, இடையூறு களுக்கு அஞ்சிவிடாமல் செய்து முடிக்க மன உறுதி கொள்ளவேண்டும் என்பதை 'வினைத்திட்பம்' என்ற அதிகாரம் விளக்குகின்றது. அப்படி மன உறுதியுடன் செய்கிற காரியத்தையும் செய்யவேண்டிய முறையில் செய்ய வேண்டும் என்பதைச் சொல்லுவது 'வினைசெயல் வகை' என்ற அதிகாரம். அந்த முறையாவது: நிதான மாகச் செய்யவேண்டிய காரியத்தில் அவசரம் கூடாது; உடனே செய்யவேண்டிய காரியத்தில் தாமதம் கூடாது; எந்தக் காரியத்தையும் அதற்கேற்ற வாய்ப்பறிந்து செய்யவேண்டும்; காரியத்தைத் தொடங்கிவிட்டபின் அதை முடித்துவிடாமல் மிச்சம் விட்டு நிறுத்திவைக்கக் கூடாது; காரியத்துக்கு அவசியமான வசதிகளையெல்லாம் தயார் செய்துகொண்டுதான் ஆரம்பிக்கவேண்டும்; நல்ல காரியம் என்றாலும் ஏதேனும் தீய பயன் உண்டாகி விடுமா என்பதையும் கவனிக்கவேண்டும்; எந்தக் காரி யத்தைச் செய்வதானாலும் அந்தக் காரியத்தின் உள வறிந்த அனுபவசாலியைக் கேட்டுச் செய்யவேண்டும்; அனுபவசாலியைக் கேட்டுச் செய்வதைவிட அதைச் செய்யத் தெரிந்தவனைக் கொண்டே அதைச் செய் விப்பது மிகவும் நல்லது; பகையாளியை வெல்ல உறவாளி களைச் சேர்த்துக்கொண்டு அவர்களுக்கு உபசாரங்கள் செய்துகொண்டிருப்பதைவிட பகையாளியையே உற வாளியாக்கிக்கொள்வது மிக நல்ல காரியம்; தன்னைவிட வலிமை மிகுந்தவர்களிடம் பகைமை நேர்ந்து, முரட்டுப் பிடிவாதம் காட்டினால் தன்னைச் சேர்ந்தவர்களுக்குத் தீமை வருமென்று தெரிகிறபோது பணிந்துபோவதே நல்லது—என்பனவாகிய 'வினை செயல் வகை'.

இந்த அதிகாரத்தின் மூன்றாவது குறள்:

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்

என்பது. இதன் பொருள்: முடிந்தபோதெல்லாம் காரியத்தை உடனே செய்துவிடுவதுதான் நல்லது. ஆனால், உடனே செய்துவிட முடியாதிருக்கிறபோது அவசரப் பட்டுவிடாமல் சரியான வாய்ப்புக் கிடைக்கும் வரை காத்திருந்து செய்யவேண்டும்—என்பது.

இதில் அமைச்சனையோ அரசனையோ மற்றும் அவர்களுக்குச் சம்பந்தப்பட்ட விஷயங்களையோ இழுத்துப் பேச இடமில்லை. ஆனால் இதற்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை, மிகவும் பொருத்தமற்ற விபரீதமான விஷயங்களை விரிக்கின்றது.

அந்த உரை: வினை செய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போரால் செய்தல் நன்று. அஃதியலாவிடத்து ஏனை மூன்றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாயம் நோக்கிச் செய்க—என்பது.

இந்த உரைக்கும் மேலேயுள்ள குறளில் இருக்கிற பதங்களுக்கும் ஏதாவது பொருத்தமிருக்கிறதா பாருங்கள். இந்த உரை 'எந்தக் காரியத்தையும் போர் நடத்திச் செய்வது நல்லது. போர் செய்ய முடியாவிட்டால், சாம, பேத, தானம் என்ற மற்ற மூன்று உபாயங்களில் ஏதாவது ஒரு உபாயத்தால் செய்யவேண்டும்' என்று சொல்லுகிறது. இந்த உரையின்படி 'வினை' என்பதற்கும், 'போர்' என்பது பொருளாகின்றது. 'செல்லும் வாய்' என்பதற்கு 'சாம, பேத, தானம் என்பவற்றுள் ஒன்று' என்பது பொருளாகிறது. மேலும் போர்புரிய நினைக்க வேண்டியவர்களும் கூட முதலில் சாம, பேத, தானம் என்ற மூன்று உபாயங்களையும் முறையே கையாள வேண்டுமென்றும் இந்த மூன்று உபாயங்களாலும் முடியாது போனால்தான், கடைசி பட்சமாகத் 'தண்டம்' என்ற போர்புரிதலை மேற்கொள்ள வேண்டும் என்பது வழக்கமாகச் சொல்லப்படுகிற நெறி முறை. அப்படியிருக்க, இந்த உரையில் எந்தக் காரியத்தையும் போர் செய்து முடித்துக்கொள்வதுதான் நல்லது; அப்படிப் போர் செய்ய முடியாத போதுதான் 'சாம, பேத, தானம்' என்ற மற்ற மூன்று உபாயங்களில் ஒன்றை மேற்கொள்ளவேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பது மிகவும்

விபரீதமானது. இது எல்லா நீதி நூல்களுக்கும் விரோத மானது.

இந்தக் குறளுக்கு விசேட உரையாகச் சொல்லப்பட் டிருக்கிறது என்னவெனின்: இயலுமிடம்: பகையிற்றுன் வலியனுய காலம். அக்காலத்துத் தண்டமே நன் றென்றுர், அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம் ஒத்த காலமும் மெலிய காலமும். அவ்விரண்டு காலத்தும் சாம, பேத, தானங்களுள் அது முடியும் உபாயத்தாற் செய்க வென்றுர். அவை ஒன்றற்கொன்று வேறுபா டுடைய வேனும் உடம்படுத்தற் பயத்தாற் றம்முள் ஒக்குமாகலின், இதனுல் வலியான், ஒப்பான், மெலியான் என நிலே மூவகைத் தென்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப்பட்டன—என்பது.

இது அரசனையும் அமைச்சனையும் சேர்த்துக் குழப்பு கிறது. இங்கே பகைவன் யார்? போர் எதற்காக? அரசனுக்காகுலும் அமைச்சனுக்காகுலும், 'வினை செயல் வகை' என்பது போர்புரியும் வேலை ஒன்றுதானு தொழில்? 'வினை' என்ற சொல்லுக்குப் 'போர்' என்பது பொரு ளானுல் 'வினைத்தூய்மை' என்பதல்ல 'போரின் தூய்மை' என்றும் 'வினைத்திட்டம்' என்பதற்கு 'போர் செய்யும் திட்பம்' என்றும் பொருள் கொள்ளலாமா? 'வினை' என்ற பதத்திற்கு 'வேலை', 'தொழில்', 'செய்கை', 'காரியம்' என்பவைகளே பொருளாகும். போர் நடக்கும் சூழ்நிலைகளில் 'போர்வினை', 'சமர்வினை' என்று கொள்ளவேண்டிய இடங்களில் அது போரைக் குறிக் கலாம். 'வினை' என்ற தனிச் சொல்லுக்குப் 'போர்' என்ற அர்த்தம் எங்குமில்லை. இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் செய்துள்ள இந்த உரையில்தான் 'வினை' என்ற சொல்லுக்குப் 'போர்' என்ற பொருள் புகுத்தப் பட்டுவிட்டது. அதிலிருந்து பிற்காலத்திய அகராதி களிலும் 'வினை' என்றபதத்திற்குப் 'போர்' என்பதும் ஒரு அர்த்தமாக அச்சடிக்கும் வழக்கம் உண்டாகிவிட்டது. தமிழ் ஆசிரியர்களும் கடந்த 600 ஆண்டுகளாக இந்தப் பொருளைப் போதித்து வந்திருக்கிறுர்கள். இது பெரும் பிழை.

(9) 'பெரியாரைப் பிழையாமை' என்ற அதிகாரமும் 'அங்கயியல்' என்ற பகுதியில் உள்ளது. இந்த அதிகாரம் அறிவிலும் ஆற்றலிலும் அனுபவத்திலும் ஆன்ம பலத்திலும் நம்மினும் பெரியவர்களாக உள்ளவர்களுக்குப் பிழை புரியாமல் இருக்கவேண்டும் என்ற பொது அறிவைப் புகட்டுவது. இங்கே 'பெரியார்' என்று திருவள்ளுவர் யாரைக் கருதிச்சொல்கிறூர் என்பது மிகவும் கவனிக்கவேண்டிய விஷயம். இந்த அதிகாரத்திலுள்ள பத்துக்குறள்களையும் படிக்கும்போதே 'பெரியார்' என்பது உயர்ந்த கொள்கைகளோடு அறவொழுக்கங்களால் சிறந்து பிறருக்கு நல்ல வழி காட்டக்கூடியவர்களைத்தான் குறிக்கும் என்பதைக் காணலாம். ஆனல், இந்த அதிகாரம் அமைச்சனுக்கும் அரசனுக்கும் சம்பந்தப்பட்டதாக எண்ணிக்கொண்டு விட்டதால் இதிலுள்ள ஒரு குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை, இந்த அதிகாரத்தின் நோக்கத்தையே அழித்துவிடக் கூடியதாக இருப்பதால் இந்த அதிகாரத்திலுள்ள பத்துக் குறள்களிலும் உள்ள பதங்களை ஒருமுறை பார்ப்போம்.

(1) ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை.

(2) பெரியாரைப் பேணுது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

(3) கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.

(4) கூற்றத்தைக் கையால் விளித்தற்ருல் ஆற்றுவார்க்கு
ஆற்ருதார் இன்ஞ செயல்.

(5) யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(6) எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(7) வகைமாண்ட வாழ்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்.

(8) குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(9) ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(10) இறந்தமைந்த சார்புடையார் ஆயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

இவற்றிலுள்ள எந்தப் பதமும் அமைச்சனையோ, அரசனையோ, அரசியலையோ குறிப்பதல்ல வென்பது தெரிகிறது.

இந்த அதிகாரத்தின் மூன்றாவது குறள் :

கெடல்வேண்டின் கேளாதுசெய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண இழுக்கு.

இதற்கு வசன நடை : கெடல் வேண்டின் கேளாது செய்க; அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு செய்க—என்பது.

இந்த அதிகாரத்தின் நோக்கத்தை ஒட்டி இதற்குப் பொருள் என்னவெனில் : காரியம் கெட்டுப் போக வேண்டுமானால் பெரியாரைக் கேளாமல் காரியத்தைச் செய்க; உனக்கே துன்பம் வரவேண்டுமானால் பெரியாருக்குப் பிழை செய்க—என்பதே.

முதற்குறளில், ''போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை ஆற்றுவார் ஆற்றல் இகழாமை'' என்று, பாதுகாத்துக்கொள்ள வேண்டிய எல்லாவற்றிலும் பெரியாருடைய ஆற்றலை இகழ்ந்துவிடாமல் இருப்பது தான் தலைசிறந்தது என்று சொல்லப்பட்டது.

இரண்டாவது குறளில் 'பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால் பேரா இடும்பை தரும்' என்று 'பெரியாரை மதிக்காமல் நடந்துகொண்டால் பின் பெரியாராலும் நீக்க முடியாத துன்பம் வந்துவிடும்' என்று சொல்லப்பட்டது.

இந்தக் குறளில் 'பெரியாரைக் கேளாது எதையும் செய்தால் காரியம் கெட்டுப் போகும். பெரியாருக்குத் தவறிழைத்தால் உனக்கே துன்பம் வந்துவிடும்' என்று சொல்லப்படுகிறது.

ஆனால், இந்தக் குறளில் அமைச்சர்களையும், அரசனையும் புகுத்தியதால் இதன் மிக நல்ல பொருள் கெட்டுப் போனது மட்டுமல்லாமல் சிறிதும் பொருத்தமற்றதான வெகு விபரீத உரை செய்யப்பட்டுவிட்டது.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் செய்துள்ள உரை : 'வேற்று வேந்தரைக் கோறல் வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டுப் பிழையினை தான் கெடுதல் வேண்டினானாயின் ஒருவன் நீதி நூலைக் கடந்து செய்க' என்பது. இந்த உரையின் கருத்து என்னவென்றால்: ஒரு அரசன், தனக்குப் பகைவனாகிய வேறொரு அரசனைக் கொல்ல வேண்டுமானால் தான் கொல்ல விரும்பும் வேறொரு அரசனை உடனே கொன்றுவிடக்கூடிய மிகுந்த பலமுடைய பெரியானாகிய ஒரு வேந்தனுக்குப் பிழை செய்யாதிருக்க வேண்டும். பிழை செய்தால் கெட்டுப் போவான். அப்படிப் பிழை செய்வது நீதி நூலுக்கும் விரோதமானது—என்பது.

இந்த உரைக்குப் பதங்களாகக் கூட்டியிருக்கிற விதம்: அடல் வேண்டின் ஆற்றுபவர்கள் இழுக்கு, கெடல் வேண்டின் கேளாது செய்க—என்றபடி. இதற்கு வார்த்தைக்கு வார்த்தை அப்படியே பொருள் செய்யப்பட்டுள்ளபடி என்னவென்றால் : கொல்ல வேண்டுமானால் அதைச் செய்யக்கூடியவர்களிடம் தப்பிதத்தைத்தான் கெடுதல் வேண்டினால், நீதி நூலைக் கேளாது செய்க—என்பது.

இங்கே வேற்று வேந்தன் யார்? அவரைக் கொல்ல வேண்டிய காரணம் என்ன? 'அடல்' என்பதற்குக் 'கொலை' ஒன்றுதானா அர்த்தம். 'கேளாது' என்பதற்கு 'நீதிநூலைக் கடந்து' என்ற பொருள் எப்படிப் பொருந்தும்? திருவள்ளுவரின் கருத்துக்கும் திருக்

குறளின் பெருமைக்கும் இந்த உரை மிகவும் பிழை செய்வதாகும்.

இந்தக் குறள் அங்கவியலில் இருக்கிறது என்பதற்காக இதில் அமைச்சனைப் புகுத்தி அத்துடன் அரசனையும் இழுத்து, அவர்களுக்குப் பகை வேந்தரை உண்டாக்கிக் கொலைத் தொழிலையும் கூட்டி, அக்கொலை செய்ய வல்லானைப் பெரியாருள் சேர்த்துப் பொருள் செய்ய வேண்டிய சங்கடம் ஏற்பட்டுவிட்டது.

(10) 'பெண்வழிச் சேரல்' என்ற அதிகாரமும் அங்கவியலில் அடங்கியது. இவ்வதிகாரம் இல்லறத் தலைவனாகிய கணவன் வெறும் காம இன்பத்துக்காக மனைவியின் இச்சைப்படியே காரியங்களைச் செய்வதோ, அவளுக்கு அடங்கி நடப்பதோ, அஞ்சி நடப்பதோ தகாது என்பதை மட்டும் சொல்வது. இதிலுள்ள பத்துக் குறள்களிலும் ஆணும் பெண்ணும் அல்லது கணவனும் மனைவியும் என்பதைத் தவிர வேறு பேச்சுக்கே இடமில்லை.

ஆனால், இது அங்கவியலில் இருப்பது என்பதற்காக இந்த அதிகாரம் முழுவதும் அரசனுக்குச் சொல்லப் பட்டதுபோலக் கடைசிக் குறளில் வேந்தன் புகுத்தப் பட்டிருக்கிறான்.

அந்தக் குறள் :

எண்சேர்ந்த நெஞ்சத்திட னுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண் சேர்ந்தாம் பேதைமை இல்.

இதற்கு நேரான பொருள்: சொந்த ஆலோசனையும் மன உறுதியும் இருக்க வேண்டிய ஆண்மக்களுக்கு எப்போதும் பெண்ஜாதியைக் கேட்டுத்தான் ஆகவேண்டு மென்ற மடமை இருக்கக்கூடாது—என்பது.

ஆனால், இதற்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை என்னவெனில்: கருமச் சூழ்ச்சிக்கண் சென்ற நெஞ்சத் தினையும் அதனிறுய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலான் விளையும் பேதமை எக்காலத்தும் உண்டாகாது—என்பது.

இதிலுள்ள 'எண்சேர்ந்த நெஞ்சத்தினுடையார்க்கு' என்பது 'சொந்த எண்ணமும் (அதாவது சொந்த ஆலோசனையும்) மனேதிடமும் உள்ளவராகிய ஆண் மக்களுக்கு' என்ற பொருளைத் தரத்தான் இருக்கிறது. ஏனென்றால் அதுதான் ஆண்பிள்ளைக்கு இயல்பு. ஆனால், வேந்தனை இதில் கூட்டுவதற்காக 'எண்சேர்ந்த நெஞ்சத்து இடனுடையார்க்கு' என்று பிரித்து, 'இடன் உடையார்க்கு' என்பதற்கு 'செல்வத்தினை உடையார்க்கு' என்று பொருள் செய்து செல்வம் வேந்தனுக்கு மட்டுந் தான் உள்ளதுபோல 'செல்வத்தினை உடையராய வேந்தர்க்கு' என்று சொல்லப்பட்டுள்ளது. 'இடன்' என்பதற்குச் 'செல்வம்' என்றே பொருள் கொண்டாலும் 'வேந்தனுக்கு' இங்கென்ன வேலை? வேந்தன் அல்லாதவர்கள் செல்வமுடையவர்களாக இருக்க முடியாதா? கருமம் செய்யும் சூழ்ச்சிகளை எண்ணி அதனால் செல்வமுடையவராக இருப்பது வேந்தனுக்கு மட்டுந்தான் உரிமையா?

(11) 'கள்ளுண்ணாமை' என்ற அதிகாரமும் அங்கவியல் பகுதியில் உள்ளது. இது கள்ளைக் குடிக்கக் கூடாது என்று வற்புறுத்துவது. இது எல்லோருக்கும் பொதுவானது. எக்காரணத்தாலும் அரசனைக் கருதிச் சொல்லப்பட்டதாகக் கொள்ள முடியாது. ஆனால் இது அங்கவியலில் இருக்கிறது என்பதற்காக அரசனைக் கருதிய விஷயம்போலப் பொருள் செய்யப்பட்டிருக்கிறது: இவ்வதிகாரத்தின் முதற்குறள்:

> உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
> கட்காதல் கொண்டொழுகு வார்.

என்பது. இதற்குப் பரிமேலழகர் சொல்லும் உரை: கள்ளின்மேல் காதல் செய்தொழுகும் அரசர் எஞ்ஞான்றும் பகைவரால் அஞ்சப்படார்: அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையும் இழப்பர்—என்பது.

இதற்கு விசேட உரையாகச் சொல்லப்பட்டுள்ளது என்னவெனில்: அறிவின்மையால் பொருள் படை முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார்,

தம்முன்னோரா னெய்திநின்ற ஒளியினையும் இகழற் பாட்டான் இழப்பரென்பதாம். இவையிரண்டாலும் அரசு இனிது செல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது— என்பது.

இந்தக் குறளிலுள்ள எந்தப் பதமும் அரசனைக் குறிப்பதல்ல. மேலும் 'கட்காதல் கொண்டொழுகுவார்' என்பதிலுள்ள 'ஒழுகுவார்' என்ற பதம் பொதுவாகக் கள்ளாசை கொண்ட எல்லாரையும் சேர்த்துச் சொல்ல நிற்பது. 'உட்கப்படாஅர்' என்பதற்கு 'அஞ்சப்படார்' என்றே பொருள் கொள்ளவேண்டும் என்பதில்லை. 'உட்குதல்' என்பதற்கு 'மதிப்பளித்தல்' என்ற பொருளும் உண்டு. ஆனால் இதில் அரசனைக் கூட்டு தற்காக 'அஞ்சப்படார்' என்ற பொருள் கொள்ளப்பட் டிருப்பதாகத் தெரிகிறது.

இந்தக் குறள் சொல்லுவது: 'கட்காதல் கொண்டு ஒழுகுவார் எஞ்ஞான்றும் உட்கப்படார்; ஒளி இழப்பர்' என்பதே. அதற்கு இயல்பான பொருள் 'கள்ளாசை கொண்டு நடப்பவர்கள் ஒருபோதும் மதிக்கப்பட மாட்டார்கள். அவர்கள் பெருமையை இழந்துவிடு வார்கள்' என்பது மட்டுந்தான். இந்தக் குறள் அங்க வியலில் இருப்பது என்ற ஒரே காரணத்துக்காக இந்தப் பொருள் செய்யப்பட்டுள்ளது.

(12) 'சூது' என்ற அதிகாரமும் அங்கவியலில் இருப் பதனால், அது அரசனுக்குச் சொல்லப்பட்டதுபோலப் பொருள் தரப்பட்டுள்ளது. சூதாடுவதால் வரும் கேடுகள் எவை என்பதை எல்லா மனிதரும் அறிந்து, சூதாட்டத் தில் இறங்கிவிடக்கூடாது என்று எச்சரிக்கை செய்வது இந்த அதிகாரம். இந்த அதிகாரத்தின் பத்துக் குறள் களையும் உடனே ஒருமுறை பார்த்துவிட்டால் அவற்றுள் அரசனைப் புகுத்திப் பொருள் கொள்வது திருவள்ளுவ ருடைய கருத்துக்குப் பொருந்தாது என்பது புலனாகும்:

(1) வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று.

(2) ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.

(3) உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(4) சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல்.

(5) கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்.

(6) அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியான் மூடப்பட் டார்.

(7) பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

(8) பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழைப்பிகக்கும் சூது.

(9) உடைசெல்வம் ஊண்ஒளி கல்வியென்ற ஐந்தும்
அடையாளம் ஆயம் கொளின்.

(10) இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர்.

இவை யாவும் மனிதராக உள்ள எல்லாருக்கும் பொதுப்படச் சொல்லப்பட்டவை. இவற்றிலுள்ள எந்தச் சொல்லும் அரசனைக் குறிப்பதல்ல. ஆனால் இவ்வதிகாரத்தின் மூன்றாவது, ஐந்தாவது, ஏழாவது, ஒன்பதாவது குறள்களில் அரசனைக் கூட்டிப் பொருள் செய்திருப்பதால் இவ்வதிகாரத்தின் பொதுத்தன்மை கெட்டுப் போகிறது. அதனால் 'யாரும் சூதாடக்கூடாது' என்று சொல்வதை விட்டு, 'அரசர்கள் சூதாடக்கூடாது' என்று சொல்வதாகிவிடுகிறது. அந்த மூன்றாவது குறள்:

உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

இதற்கு முன்னாலுள்ள இரண்டு குறள்களையும் தொடர்ந்து இதற்குப் பொருள் செய்தால் மிக நல்ல கருத்து இதிலடக்கப்பட்டிருக்கிறது புலனாகும். முதற் குறள் சொல்வது: 'வெற்றி கிடைத்தாலும் சூதாட்

டத்தை விரும்பக்கூடாது. ஏனென்றால் அந்த வெற்றி, ஒரு மீன், இரையென்று நம்பி விழுங்கிய தூண்டில் முள்ளுக்கு ஒப்பானது' என்பது. இரண்டாவது குறள் சொல்வது: 'ஒருமுறை கெலித்து நூறுமுறை தோற்கச் செய்கிற சூதாட்டக்காரருக்கு நன்மையடைந்து வாழக் கூடிய வழிகூட உண்டா' என்பது. இந்த இரண்டையும் தொடர்ந்து இந்தக் குறளின் பொருள்: 'உருளுகின்ற சூதாட்டம் அதில் இறங்கிவிட்டால் ஓயாது. சொல்லப் போனால் உள்ள செல்வமெல்லாம் தொலைந்து போன தற்கு அப்புறந்தான் ஓயும். அதாவது ஒருமுறை வெற்றி காட்டி நூறு முறை தோல்வியுண்டாக்குகிற சூதாட்டக் காரருக்கு நல்வாழ்வு இல்லையென்பது எதனாலென்றால், சூதாட்டத்தில் இறங்கிவிட்டால், ஒருவனுக்கு உள்ள செல்வமெல்லாம் தொலைந்து போகிறவரையிலும் ஓய விடாது' என்பது கருத்து. இதுதான் இக்குறளிலுள்ள பதங்களும் இங்குள்ள சூழ்நிலையும் தரக்கூடிய நல்ல பொருள்.

ஆனால், இதற்குப் பரிமேலழகர் தருகின்ற உரை என்னவெனில்: உருளும் கவற்றின் கட்பட்ட ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், அரசன் ஈட்டிய பொருளும் அவன் பொருள் வருவாயும் அவனைவிட்டுப் போய்ப் பகைவர்கண்ணே தங்கும்—என்பது.

இங்கே அரசனையும் அவனுடைய பகைவர்களையும் கூட்டுவது ஒரு சிறிதும் பொருந்தாது. இதிலுள்ள 'போஓய்ப் புறமே படும்' என்பதற்குப் 'போய்விட்ட அப்புறமே ஓயும்' என்பதுதான் சரியான பொருள். 'புறம்' என்பதற்கு 'அப்புறம்' அதாவது அதன்பிறகு' என்பதுதான் பொருத்தமான பொருள். அந்தப் பொருளைக் கொள்ளாவிட்டாலும் 'புறம்' என்ற சொல் லுக்கு 'அயலிடம்' அல்லது 'அயலார்' என்பதுதான் பொருளாகும். 'பகைவன்' என்ற பொருள் எப்படி வரும்? அரசனைக் கூட்டியதால் அப்படி இல்லாத பொருளையும் கூட்டவேண்டியதாயிற்று.

இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறள் :

கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்

இதிலுள்ள பதங்களின்படி இதற்குப் பொருள் : சூதாடும் இடத்திலும் சூதாட்டத்திலும் மிகுந்த ஆசை வைத்தவர்கள் இல்லாது போனவர்கள். அதாவது சூதாடும் கூட்டத்திலும் சூதாடுவதிலும் மிக்க ஆசை கொண்டவர்களெல்லாம் இருந்த செல்வத்தை இழந்து ஒன்றுமில்லாது போனவர்கள். இதிலுள்ள 'இல்லாகி யார்' என்பது இறந்த காலத்தில் இருந்தாலும் முக் காலத்தையும் குறிப்பதாகும். அன்றியும் இது பொது அறிவாகத்தான் சொல்லப்பட்டிருக்கும்.

ஆனல், இதற்குப் பரிமேலழகர் சொல்லும் உரை : முற்காலத்துத் தாமுளராகியே இலராகி யொழுகினர், கவற்றினையும் அஃதாடும் களத்தினையும் அவ்வாடற்கு வேண்டிய கைத்தொழிலினையும் மேற்கொண்டு கை விடாத வேந்தர்—என்பது.

இங்கே 'வேந்தர்' என்ற பதம் கூட்டப்பட்டிருப்பது பொருந்தாது. சூதாட்டத்தில் ஆசைகொண்ட எல்லாருந் தான் செல்வத்தை இழந்து 'இல்லாகியார்'. இதில் வேந்த னுக்கு மட்டும் என்ன சிறப்பு? அன்றியும் சூதாடிய வேந்தர்கள் சூதாடும் கழகத்துக்குப் போய் சூதாடுகிறவர் களல்ல. 'கழகம்' என்பது பலபேர் சூதாட்டத்துக் கென்றே கூடுகின்ற இடம். இதற்கு உதாரணமாக இதன் விசேட உரையில் சொல்லப்படுகிற பாண்டவர் களும் சூதாடும் கழகத்தில் சூதாடி இழந்தவர்களல்ல. இந்தக் 'கழகம்' என்ற பதத்தினல் இந்தக் குறள் சூதாட் டத்தில் ஆசையுள்ள பொதுமக்களைக் குறித்ததல்லாது அரசரைக் கருதியதல்ல என்பது நிச்சயம். ஆனல், இந்த அதிகாரம் அங்கவியல் பகுதியில் இருக்கிறது என்ற ஒரே காரணத்தால் வேந்தரைக் கூட்டப்பட்டிருக்கிறது.

இவ்வதிகாரத்தின் ஏழாவது குறள் :

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்

இதிலுள்ள பதங்கள் தருகின்ற பொருள்: இளம் பிராயத்தில் சூதாடத் தொடங்கிவிட்டால் அது பரம் பரையாக உள்ள செல்வத்தையும் நல்ல குணங்களையும் அழித்துவிடும்—என்பது. இதற்குப் பரிமேலழகர் தரும் உரை: அறம் பொருள் இன்பங்களுக்கு அடைத்த காலம் அரசனுக்குச் சூதாடு களத்தின்கண் கழியுமாயின், அக் கழிவு தொன்று தொட்டு வந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும்—என்பது. இதிலுள்ள 'கழகத்துக் காலை புகின்' என்பதற்கு என்ன பொருள் கொண்டாலும், அறம், பொருள், இன்பம் என்பன அரசனுக்கு மட்டும்தானா? மற்றவருக் கில்லையா? தொன்று தொட்டு வரும் செல்வமும் நற்குணங்களும் அரசனுக்குத்தானா?

இந்த அதிகாரத்தின் ஒன்பதாவது குறள்:

உடைசெல்வம், ஊண் ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்

என்பது. இதன் பொருள்: சூதாட்டத்தை மேற் கொண்டால் உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி என்ற ஐந்தும் அடைய முடியாது—என்பது மட்டும்தான்.

இதற்குப் பரிமேலழகர் உரை: அரசன் சூதினைத் தனக்கு விநோதத் தொழிலாக விரும்புமாயின், அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையும் என்றிவ்வைந்தும் சாராவாம்—என்பது. இங்கே அரசனைப் புகுத்தியது எவ்வளவு பொருத்தமற்றது என்பது சொல் லாமலே விளங்கும். இப்படி அங்கங்கே அரசனைப் புகுத்தியிருப்பதன் காரணம் 'அரசியல்', 'அங்கவியல்' என்ற இரண்டு பகுதிகளும் அரசனைக் கருதியே சொல்லப் பட்டிருப்பதாகக் கொண்டுவிட்டதேயாகும். அப்படிக் கொள்வது திருவள்ளுவரின் நோக்கத்துக்கு முரணானது; திருக்குறள் 'பொதுமறை' எனப் புகழப்படுவதற்கும் பொருந்தாது.

## பொய்யா மொழி

'பொய்யாமொழி' என்றால் எந்தக் காலத்துக்கும் பொருந்துவதாகிய உண்மையைச் சொல்லுகின்ற நூல். அதாவது நிரந்தரமாகிய சத்தியங்களை நினைப்பூட்டி மனிதனுக்கு நல்லறிவு காட்டுவதற்கு எப்போதும் உதவுகின்ற நூல். பல நூல்கள் சில காலத்துக்குத்தான் பயன்படும். சில நூல்கள் நெடுங் காலத்துக்குப் பயன் படும். மாறாத ஒரு சில நூல்கள் எக்காலத்துக்கும் பயன் படும். உண்மைகள் எந்த அளவுக்கு அடங்கியிருக்கின்றனவோ அந்தளவுக்கு ஒரு நூல் பொய்யா மொழியாகும்.

மாறாத உண்மைகள் என்று சொல்லுகின்றபோது மாறுகின்ற உண்மைகளும் உண்டா என்ற கேள்வி உதிக்கின்றது. ஆம்; மாறி மறைந்து விடுகிற உண்மைகளும் உண்டு. உண்மைகளில் மாறிப் போகிற உண்மை எது, மாறாத உண்மை எது என்பதை விளக்க ஒரு உதாரணம் சொல்லுவோம் :

ஆதிகாலத்தில் மனிதன் குகைகளிலும், புதர்களிலும் தழைக் குடிசைகளிலும் வசித்து வந்தான். அப்போது ஒருவனுக்கொருவன் பகையாகிவிட்டால் வெறும் தேக பலத்தைக் கொண்டு சண்டையிட்டான். அதன் பிறகு ஒருவனையொருவன் கல்லாலும் கழியாலும் அடித்துக் கொண்டார்கள். அதற்குப் பிறகு கத்தியாலும் ஈட்டியாலும் தாக்கினார்கள். அதன் பிறகு வில்லும் அம்புமாகத் தூரத்திலிருந்து கொண்டே போர் தொடுத்தார்கள். அதன் பிறகு வெடி மருந்து கண்டுபிடிக்கப்பட்டுத் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டார்கள். வெடி மருந்து போட்டுக் கெட்டித்து, நெருப்பு வைத்துச் சுடுகின்ற துப்பாக்கிக்குப்பிறகு தோட்டாப்போட்டுசுடும் துப்பாக்கி வந்தது. அதன் பிறகு நிமிடத்துக்கு ஆயிரக் கணக்கான குண்டுகளை அதிவேகத்தில் பாய்ச்சக்கூடிய 'ஸ்டென்' துப்பாக்கியும், 'ப்ரேன்' துப்பாக்கியும், இருபது முப்பது மைல் தூரத்திலுள்ள நகரங்களையும் இடித்துவிடக்கூடிய ராட்சஸ பீரங்கிகளும் ஆகாய விமானங்களும் அவற்றிலிருந்து வீசக்கூடிய பலவித வெடி குண்டுகளும் போர்க்

கருவிகளாயின. இப்போது அவை அணுகுண்டாகவும் 'ஹைட்ரொஜன்' குண்டாகவும் உருக்கொண்டுள்ளன. இந்த அணுகுண்டு, ஹைட்ரொஜன் குண்டுகளுக்குப்பின் இன்னும் நூதனமான நாசக் கருவிகள் வரலாம்.

இவை அனைத்தும் உண்மைகளே. ஆனால், மாறி விடுகின்ற உண்மைகள். இந்தக் காலத்தில் யாரும் வில்லும் அம்பும் கொண்டு யுத்தம் செய்ய மாட்டார்கள். அல்லது வெடி மருந்தைத் திணித்து நெருப்பு வைத்துச் சுடுகின்ற துப்பாக்கியையோ பீரங்கியையோ நினைக்க மாட்டார்கள். ஆனால், இப்படி மாறிப்போன உண்மை களுக்கெல்லாம் காரணமாகிய ஒரு உண்மை இருக்கிறது. அதுதான் மாருத உண்மை. அது என்னவென்றால், மனி தனுடைய சுபாவத்திலுள்ள மிருகத்தன்மையைச்சேர்ந்த மாச்சரிய குணம். விலங்குகளைப் போலவே வனங்களில் வசித்து வந்த ஆதி மனிதன் நாளுக்கு நாள் அறிவுக ளடைந்து, சல்லாபித்து வாழும் சமுதாயமாகி, அழகான நகரங்களை உண்டாக்கி ஆடை ஆபரண அலங்காரங்களில் மிகுந்து கல்விகள் நிறைந்து, கலைகளிற்சிறந்து, விஞ்ஞான சக்திகளில் விருத்தியடைந்து, பகைமைக் குணமும் பகை வனை அழித்துவிட வேண்டும் என்ற மாச்சரியமும் அன்று முதல் இன்றளவும் மாருமல் இருந்துகொண்டே யிருக் கின்றன. இது மாருத உண்மை. இந்த மாருத உண்மை யோடு இன்னொரு மாருத உண்மையும் மனிதனுக்குள் இருந்து கொண்டேயிருக்கிறது. அது என்னவெனில்: மனிதன் இயற்கையாக மிருகத்தன்மையே மிகுந்தவன் என்றாலும் அவனுள் வெறும் மிருகத்தினிடத்தில் இல்லாத வேறொரு உணர்ச்சியும் இருக்கிறது. அதுதான் ஆருவது புலன் என்று சொல்லப்படுகிற பகுத்தறிவு. அந்தப் பகுத் தறிவினால்தான் மனிதன் விலங்குகளிலிருந்து வேறு பட்டவனாகிறான். அதுதான் அவனுக்கு அன்புக் குணத் தையும் அருள் நோக்கத்தையும் உண்டாக்குகிறது. மிருகத் தன்மைக்கு முற்றிலும் வேறுபட்டதாகிய இந்தப் பகுத்தறிவை மிருகத்தன்மையான ஐம்புல ஆசைகள் அடிக்கடி வந்து அழுத்திக் கொள்ளுகின்றன. அதனால் தான் மனிதன் அடிக்கடி மிருகத்தனத்தையே மேற்

கொள்ளுகின்றான். ஆனால் இந்தப் பகுத்தறிவு பலமாக உள்ள ஒருவன் அந்த ஐம்புல ஆசைகளை அடக்கி யாளும் வல்லமை அடைகின்றான். அந்த வல்லமை மனிதனுக்கு ஆன்ம உணர்ச்சியையும் ஆன்ம வளர்ச்சியையும் கொடுக்கிறது. அதனால் மனிதன் வெறும் ஐம்புல இன்பங்களை விட இன்னும் மேலான இன்பத்தை நாடுகின்றான். அந்த நாட்டம் எந்த அளவுக்கு மனிதர்களிடத்தில் அதிகப்படுகிறதோ அந்த அளவுக்குச் சமுதாயத்தில் ஐம்புல ஆசைகளால் நிகழும் குற்றங்கள் குறைவாகும். மக்கள் சுமுகமாக வாழ்வார்கள்.

இப்படி, மனிதனுடைய சுபாவத்தில் எப்போதும் இருந்து வருகிற பொய்யாத உண்மையாகிய ஐம்புல ஆசைகளையும் அவற்றால் விளையும் துன்பங்களையும், அதே மனிதனுடைய சுபாவத்தில் எப்போதும் இருந்து வருகிற பொய்யாத உண்மையாகிய ஆறாவது புலனாகிய பகுத்தறிவுக்கு நினைப்பூட்ட நிற்பதே பொய்யாமொழி.

சாசுவதமான சத்தியங்களைப் பற்றிச் சொல்லுகின்ற எல்லா நூல்களும் 'பொய்யா மொழிகளே.' அதாவது இந்த மண்ணுலகத்துக்குச் சம்பந்தப்பட்ட ஐந்து பூதங்களைப் பற்றியும், அந்தப் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டான உடலைப் பற்றியும், அதிலுள்ள ஐந்து இந்திரியங்களைப் பற்றியும் அவைகளுக்குள்ள ஆசைகளைப் பற்றியும், இந்த ஐந்து இந்திரியங்களுக்கும் அப்பாற்பட்டதான ஆன்ம உணர்ச்சியைப் பற்றியும் விளக்குகின்ற நூல்களெல்லாம் பொய்யா மொழிகளே.

அப்படிப்பட்ட நூல்கள் திருக்குறளுக்கு முன்னாலும் உண்டு, பின்னாலும் உண்டு. ஆனாலும் 'பொய்யாமொழி' என்ற பெயர் திருக்குறள் ஒன்றுக்கே சூட்டப்பெற்றிருக்கிறது. ஏனென்றால் சாசுவதமான சத்தியங்களை அடிப்படையாகக் கொண்டு மனிதனுடைய நல்வாழ்வுக்கான அறிவுகளையெல்லாம் அறங்களாக வடித்துக் கொடுக்கிற நூல் இது ஒன்றேயாகும். திருவள்ளுவர் சாசுவதமான சத்தியங்களின் அடிப்படையில் அறங்களை வகுத்திருக்கிறார் என்பதுமட்டும் அல்ல; காலப்போக்கில் மாறிவிடக்கூடிய

சாசுவதமல்லாத காரியங்களைப் பற்றிச் சொல்லும் போதும் வெகு அபூர்வமாகிய தீர்க்க தரிசனத்துடன், அவருடைய சொல் சாசுவதமாக என்றென்றும் காலத்துக்கேற்ற பொருள் தரும்படி அமைத்திருக்கிறார். அது மிகவும் வியக்கத் தகுந்தது. அதற்குச் சில உதாரணங்களைப் பார்ப்போம்.

'படைமாட்சி' என்ற அதிகாரம் அங்கவியலில் உள்ளது. இந்த அதிகாரம் ஒரு அரசனுக்கு இன்றியமையாத அங்கமாகிய சேனையின் பெருமையைப் பற்றிச் சொல்லுவது. முன்னே சொன்னபடி, ஆதிகாலந்தொட்டு மனித சுபாவத்தில் இருந்துவருகிற மிருகத்தன்மையினால் நாட்டுக்கு நாடு சண்டைகள் இருந்துகொண்டேதான் இருக்கின்றன. அதனால் ஒவ்வொரு நாடும் தற்காப்புக்காகவேனும் எப்போதும் படை பலமுள்ளதாகவே இருக்க வேண்டியது கட்டாயமாகி விட்டது. அதனால் ஒரு அரசாங்கத்தின் தலைசிறந்த செல்வம் நிலையான சேனை என்பதையும் அந்தச் சேனைக்கு இருக்கவேண்டிய இலக்கணங்களையும் இந்த அதிகாரத்தில் விளக்குகின்றார்.

திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தை மனதிற் கொண்டால், அவர் காலத்துச் சேனை எப்படியிருந்திருக்கும் என்பதை நாம் எளிதில் ஊகிக்கலாம். அக்காலத்திய சேனை, தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நான்கு பகுதிகளுள்ளதாக இருந்தது. அந்தச் சேனையிலுள்ள போர்வீரர்கள் வில், வாள், வேல், ஈட்டி முதலிய ஆயுதங்களைக் கொண்டு தான் போர் புரிந்தார்கள். அப்படிப்பட்ட ஒரு சேனையைப் பற்றிச் சொல்லப் புகுந்த அக்காலத்து ஆசிரியர் வேறு யாரும் தேர், யானை, குதிரை, காலாள் என்ற பகுதிகளைப் பற்றியும் வில், வாள், வேல் முதலிய ஆயுதங்களைப் பற்றியும் கொஞ்சமாவது சொல்லியிருப்பார்கள். அப்படிச் சொல்லியிருந்தால் குற்றமும் அல்ல. ஆனால் நமது பொய்யாமொழிப் புலவர், காலப் போக்கால் மாறிவிடக் கூடிய வாகனங்களையும் கருவிகளையும் அறவே நீக்கிவிட்டு ஒரு சேனைக்கு என்றென்றும் இருக்க வேண்டிய சேனைத் தன்மையை மட்டும்தான்

சொல்லுகிறார். அந்த அருமையைக் கூர்ந்து அனுபவிப்போம்:

'படைமாட்சி' என்ற அதிகாரத்தின் முதற் குறள்:

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை.

என்பது. இதன் பொருள்: அங்கங்களெல்லாம் அமைந்ததாகி துன்பங்களுக்கு அஞ்சாமல் வெற்றி பெறக் கூடிய ஒரு சேனை அரசனுடைய செல்வங்களெல்லாவற்றினும் தலை சிறந்த செல்வம்.

இதில் 'உறுப்பமைந்து' என்ற பதத்திற்கு, 'தேர்ப் படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நான்கு உறுப்புக்களும் அமைந்ததாகி' என்று பரிமேலழகர் உரை செய்திருக்கிறார். அப்படி உரை செய்ததில் தவறில்லை. ஏனென்றால் பரிமேலழகர் காலத்துச் சேனையும் இந்த நான்கு உறுப்புகள் மட்டுமே கொண்டது. ஆனால், திருவள்ளுவர் வெறும் 'உறுப்ப மைந்து' என்று மட்டும் சொல்லிவிட்டு அந்த உறுப்புகள் எவை என்பதைப் பற்றி இந்த அதிகாரத்தில் எங்கும் சொல்லாது விட்டதால் இந்த 'உறுப்பமைந்து' என்ற பதம் இக்காலத்துச் சேனையின் உறுப்புகளாகிய, மோட்டார் படை, ஆகாயவிமானப் படை, பாரசூட் படை முதலிய உறுப்புகளையும் குறிக்க உதவுகின்ற தல்லவா? இந்த 'உறுப்பமைந்து' என்ற பதம் எக்காலத் துக்கும் ஏற்ற பொருள் தரக்கூடியதாக இருக்கவேண்டும் என்பதைத் திருவள்ளுவர் எண்ணித்தான் வைத்தாரா அல்லது அகஸ்மாத்தாக அமைந்ததா என்ற ஐயம் உண்டாகலாம். இந்த அதிகாரத்திலுள்ள மற்றக் குறள் களையும் அவற்றின் நோக்கத்தையும் கவனித்தால் திருவள்ளுவர் தீர்க்கமாக எண்ணித்தான் சொல்லியிருக் கிறார் என்று கொள்ள இடமிருக்கின்றது. அப்படியல்ல, இந்த 'உறுப்பமைந்து' என்ற பதம் அகஸ்மாத்தாக அமைந்ததுதான் என்று சொன்னாலும் (ரத, கஜ, துரக, பதாதிகளாகிய) நான்கு உறுப்புகளும் அமைந்த சேனையைப் பற்றிச் சொல்லுகின்ற இந்த அதிகாரத்தில்

அந்த நான்கு உறுப்புகள் எவை என்பதைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் விட்டிருப்பது திரு வள்ளுவர் எண்ணிச் செய்த காரியமே என்பதில் எள்ளள வும் சந்தேகமில்லை.

அடுத்த குறளில், நிலையாக இருந்து கொண்டிருக்க வேண்டிய மூலப்படையாகிய சேனையின் வெல்லும் திறமைக்கு அத்யாவசியமான அறிவைச் சொல்லு கின்றார். அந்த அறிவு இன்றைக்குள்ள சேனைகளுக்கும் பொருந்துவதாகிய பொய்யா மொழி. அந்தக் குறள்:

உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக்கு அல்லால் அரிது.

என்பது. இந்தக் குறள் மிகவும் கூர்ந்து கவனிக்கத் தக்கது. இதில் திருவள்ளுவர் கருதிய மிக நல்ல பொருளைக் கவனிக்காமல் இதற்கு உரை சொல்லப்பட் டிருக்கிறது. மேலும் திருவள்ளுவர் கருத்தை அறியத் தவறிவிட்டதனால் உரை மிகவும் குழப்பமுள்ளதாகி விட்டது. அதைச் சற்றுப் பொறுமையுடன் ஆராய் வோம்:

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தருகின்ற பதவுரை: தொலை விடத்து உலை விடத்து ஊறு அஞ்சா வன்கண் = தான் சிறியதாய வழியும் அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால் தன்மே லுறுவதற்கு அஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை; தொல் படைக் கல்லால் அரிது = அவன் முன்னோரைத் தொடங்கி வரும் படைக்கல்லது உளதாகாது.

பொழிப்புரையாகப் பரிமேலழகர் உரை என்ன வென்றால்: ஒரு சேனை தன்னுடைய அளவில் சிறியதாக இருந்தபோதிலும் அரசனுக்குப் போரில் கெடுதி நேரிட் டால் அந்தக் கெடுதியைத் தன்மேல் ஏற்றுக் கொள் வதற்கு அஞ்சாமல் நின்று போர் செய்கின்ற தைரியம் அவனுடைய முன்னோரைத் தொடங்கிவரும் படைக் கல்லாமல் மற்றவருக்கு இருக்காது—என்பது. இந்த உரை தெளிவாக இல்லையென்பதுமட்டுமல்லாமல் மிகவும் குழப்பமாக இருக்கிறது.

இந்தக் குறள் வெறும் சேனையைப் பற்றித்தான் பேசுகின்றது. இந்த அதிகாரம் முழுதும் பல உறுப்பு களும் சேர்ந்து, ஆயிரக்கணக்கான போர்வீரர்கள் அடங்கியதான படையைப் பற்றியதேயன்றி, அப்படை யிலுள்ள தனி மனிதர்களைப் பற்றியது அல்லவென்பது நிச்சயம். அப்படியிருக்க இந்த உரையில் 'அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால், தன் மேலுறுவதற்கு அஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை அவனுடைய முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உள தாகாது' என்பதிலுள்ள 'தன்மேல்' என்பதும் 'அவ னுடைய' என்பதும் யாரைக் குறிக்கின்றன? இவை படையிலுள்ள தனித் தனிப் போர் வீரனையும் குறிப்ப தாகத்தான் தெரிகின்றது. அப்படியானால் இந்த உரை யின் ஆரம்பத்தில் 'தான் சிறியதாய வழியும்' என்பதி லுள்ள 'தான்' என்ற சொல் படையைக் குறுக்கின்றதே! ஏனெனில், 'சிறியதாய்' என்பது அஃறிணையில் இருப்ப தால் போர் வீரனைக் குறிக்காது. அதனால், இந்தக் குறளின் பொழிப்புரை இதிலுள்ளபடி எப்படி அமைகிற தென்றால்: 'ஒரு சேனையானது, தான் சிறியதாய வழியும் தன் அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால் தன்மேலுறுவதற்கு அஞ்சாது நின்று தாங்கும் வன் கண்மை, அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக் கல்லது உளதாகாது' என்று அமைகிறது. இது மிகவும் குழப்பமுள்ளதாக இருக்கிறது. இந்தக் குழப்பத்திற்குக் காரணம் இந்தக் குறளில் திருவள்ளுவர் கருதுகின்ற பொருள் புலனாகாமற் போனதேயாகும். திருவள்ளுவர் கருதுகின்ற பொருள் என்னவென்றால், ஒரு அரசாங்கத் தில் நிரந்தரமாக இருந்துகொண்டே யிருக்கிற மூலப் படை எந்த நிமிஷத்தில் யுத்தம் நேரிட்டாலும் உடனே அதை மேற்கொள்ளத் தயாராய் இருக்கவேண்டும். அப்படித் தயாராக இருப்பதற்கு அந்தச் சேனை இடை யறாமல் யுத்தப் பயிற்சிகளைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். சண்டை இல்லாத காலத்திலும் சண்டை இருப்பது போலவே பயிற்சி செய்துகொண்டே யிருக்க வேண்டும். அப்படிப்பட்ட சேனைதான் சண்டை வந்தால் துன்பங்களுக்கு அஞ்சாமல் போர்புரிய வல்லது.

அந்த முறையில் இடைவிடாத யுத்தப் பயிற்சி செய்து கொண்டே இருக்காத சேனை இருந்தும் பயனற்றதாகும் என்பது. மீண்டும் இந்தக் குறளைக் கூர்ந்து பார்ப்போம்:

உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது

இதற்குப் பதவுரை: உலைவிடத்து = சண்டை உண்டாகித் துன்பம் வருகின்ற காலத்தில், ஊறு அஞ்சா வன்கண் = துன்பங்களுக்குப் பயப்படாமல் தாங்கிநின்று போர்புரியக்கூடிய வல்லமை, தொலைவு இடத்து = சண்டை இல்லாத காலத்தில், தொல் = பழகுகின்ற, படைக்கல்லால் = சேனைக்கல்லாமல், அரிது = முடியாது.

பொழிப்புரை: யுத்தம் வந்துவிட்ட சமயத்தில் யுத்தத் துன்பங்களுக்கு அஞ்சாமல் போர்புரியக்கூடிய வல்லமை, யுத்தம் இல்லாத காலத்திலும் யுத்தப் பழக்கங்களைச் செய்துகொண்டேயிருக்கிற சேனைக் கல்லாமல் (பயிற்சி செய்யாத சேனைக்கு முடியாது.)

இப்போது 'உலைவிடத்து', 'தொலை விடத்து' என்ற பதங்களுக்குச் சரியான பொருள்கள் புலப்படுகின்றன. உலை விடத்து = யுத்தத் துன்பம் உண்டான சமயத்தில். தொலைவிடத்து = யுத்தம் இல்லாத சமயத்தில். 'தொல் படை' என்றால் 'தொல்லுகின்ற படை' 'தொல்லுதல்' என்றால் 'பழகுதல்' 'தொல்' என்ற பதத்துக்குப் 'பழைய' என்ற பொருள் வருவதும் 'பழகிய' என்ற முதற்பொருளைக் கொண்டு தான். ஆதலால் யுத்தம் இல்லாத காலங்களிலும் இடைவிடாமல் யுத்தப் பயிற்சிகளைச் செய்து கொண்டேயிருக்கிற சேனைதான் எப்போது யுத்தம் வந்தாலும் அதைத் தாங்கிநிற்க வல்லமை யுள்ளதாக இருக்கும்; அந்தப் பயிற்சி இல்லாத சேனை பயனற்றது—என்பது தான் இந்தக் குறளின் பொருள்.

இந்தக் குறளுக்கு இதுதான் பொருள் என்பதை, அடுத்த குறள் உறுதிப்படுத்துகிறது. அடுத்த குறள்:

ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்

என்பது. இதன் பொருள்: எண்ணிறந்த எலிகள் சமுத்திரம்போல் பெருங்கூட்டமாகக் கூடி கூச்சலிடுவதால் என்ன ஆகிவிடும்? ஒரு நாகப்பாம்பு ஒருதரம் சீறினால் அவ்வளவு பெரிய எலிக் கூட்டமும் உடனே கலைந்து ஓடிவிடும்—என்பது. அதாவது யுத்தப் பயிற்சியில்லாத ஆட்கள் எவ்வளவு பெருங்கூட்டமாகக் கூடி யுத்த முழக்கங்கள் செய்தாலும் அதனால் என்ன பயன்? எதிர்ப்பைக் கண்டவுடன் கலைந்து ஓடிவிடுவார்கள்.

இதனால், இடைவிடாத யுத்தப் பயிற்சியுள்ள சேனை தான் போர்புரியத் தகுதியுடையது என்பதுதான்முந்திய குறளின் பொருள் என்பது தெளிவாகிறது. இதற்கடுத்த குறள், இடைவிடாத யுத்தப் பயிற்சிகளால் சேனைக்கு உண்டாகிற சேனைத்தன்மையைச் சொல்லுகிறது. அது:

அழிவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை

என்பது. இதன் பொருள்: கட்டுக்கலையாமலும் பகைவருக்கு இடங்கொடுத்து விடாமலும் இருக்கப் பழக்கப்பட்ட உறுதியுடையதுதான் சேனையாகும்.

அதாவது அணிவகுப்புக் கலைந்துவிடாமலும் பகைவருடைய சூழ்ச்சிகளுக்கு இடங்கொடுத்துவிடாமலும் இருக்கும்படி பயிற்சி பெற்ற வலிமையுடையதுதான் சேனை—என்பதாம்.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை: போரின்கட் கெடுதலின்றி, பகைவராற் கீழறுக்கப்படாததாய், தொன்றுதொட்டு வந்த தறுகண்மையை யுடையதே அரசனுக்குப் படையாவது--என்பது. இதில் 'அழிவின்று' என்பதற்கு 'போரின்கட் கெடுதலின்றி' என்ற பொருள் இந்தக் குறளின் கருத்தை விளக்குவதாக இல்லை. 'அழிவு இன்றி' என்பதற்கு 'அணிவரிசை கலைந்து விடாமல்' என்பதுதான் அர்த்தம். 'போரின்கட் கெடுதலின்றி' என்பது அதைத்தான் குறிப்பதாக இல்லை. அத்துடன் 'வழிவந்த' என்பதற்கு 'தொன்று தொட்டு வந்த' என்ற பிறப்பின் பரம்பரையைக் குறிப்பதும் சரியல்ல, பரம்பரைப் பிறப்பில் சிறப்புண்டு என்பது,

உண்மையாளுலும் சேனை கட்டுக்கலையாமல் இருப்பதும் பகைவருக்கு இடங்கொடுக்காமலிருப்பதும் பழக்கத்தாலும் பயிற்சியினுலும் வருவனவே யல்லாமல் பரம்பரையாலல்ல. ஒரு சேனை அதன் சேனைத் தன்மையில் குறையாதிருப்பதற்கு வேண்டிய பயிற்சிதான் இங்கே சொல்லப்படுவது.

இந்தக் குறளிலுள்ள 'அழிவின்றி' என்ற பதத்திற்கு 'அணிவகுப்புக்கலைந்து விடாமல்' என்பதுதான் அர்த்தம் என்பதை இதற்கு அடுத்த குறள் விளக்குகின்றது. அடுத்த குறள்:

> கூற்றுஉடன்று மேற்வரினும் கூடி எதிர்நிற்கும்
> ஆற்ற லதுவே படை

என்பது. இதன் பொருள்: எமனே சண்டை தொடுத்துக் கோபங்கொண்டு வந்துவிட்டாலும் கட்டுக்கலையாமல் சேர்ந்து நின்று எதிர்க்கக்கூடிய வல்லமையுள்ளதுதான் சேனை—என்பது. இதில் குறிப்பிட வேண்டியது 'கூடி எதிர் நிற்கும்' என்பதுதான். 'கூடி எதிர் நிற்பது' என்பது 'கட்டுக்கலையாமல் ஒன்ருகச் சேர்ந்து நின்று எதிர்ப்பது' என்பதைத்தான் சொல்லுகிறது.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் உரை: கூற்று வன்ருனே வெகுண்டு மேல் வந்தாலும் நெஞ்சொத்து எதிர்நின்று தாங்கும் ஆற்றலையுடையதே படையாவது என்பது.

இதில் 'கூடி' என்பதற்கு 'நெஞ்சொத்து' என்று பொருள் கொள்வது சரியல்ல. படையிலுள்ள தனித்தனி மனிதர்களைப் பற்றியோ அவர்களுடைய மனசைப் பற்றியோ இங்கே பேச்சில்லை. இதிற் சொல்லப்படுவது சேனைத்தன்மையாகிய (Rank and file) கட்டுக்கலையாமல் சேர்ந்து நிற்கும் பயிற்சி மட்டுந்தான். அப்படிச் சேர்ந்து நின்று எதிர்ப்பதுவே சேனைக்கு ஆற்றல் உண்டாக்குவது என்பதை வலியுறுத்தவே 'கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை' என்று பதங்களமைக்கப் பட்டிருக்கின்றன.

சேர்ந்து நின்று போர் புரிவதும் சேர்ந்து நடப்பதும் மற்றெந்தச் செய்கையையும் சேர்ந்து செய்வதுமே சேனைத் தன்மையின் சிறப்பு. இந்தக் குறளில் சேர்ந்து நின்று எதிர்த்துப் போர் புரிவதைச் சொன்னார். இதற் கடுத்த குறளில் சேர்ந்து நடைசெல்வதைச் சொல்லு கின்றார். அடுத்த குறள்:

மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

என்பது. இதன் பொருள். அஞ்சாமை, மனக்குறைவான எதையும் செய்யாமை, கெம்பீரமான வழிநடை (Marching), பயிற்சியுள்ள காரியத் தெளிவு என்ற நான்குமே ஒரு சேனையினுடைய பெருமையைப் பாது காக்கும் குணங்கள்.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை: தறுகண்மையும் மானமும் முன் வீரராயினார் சென்ற நன்னெறிக்கட் சேறலும் அரசனாற் றேறப்படுதலும் என இந்நான்கு குணமுமே படைக்கு அரணாவது—என்பது.

இதில் 'மாண்ட வழிச் செலவு' என்பதற்கு 'முன் வீரராயினார் சென்ற நன்னெறிக் கண் சேறல்' என்று பொருள் செய்வது சரியல்ல. ஏனெனில் 'மறம், மானம்' என்றதிலேயே 'முன் வீரராயினார் சென்ற நன்னெறி' அடங்கிவிட்டது. இங்கே திருவள்ளுவர் கருதியது சேனைத் தன்மைக்குப் பெருமை தருகிற அணிவகுப்புக் கலையாமல், அடியெடுத்தல் மாறாமல் நடைபோட்டுச் செல்லுகின்ற 'வழிநடையை'த்தான். ஒரு சேனைக்கு மாட்சி தரக்கூடிய தோற்றமளிப்பது இந்த வழிநடை தான். இது, ஒரு சேனையிலுள்ள போர் வீரர்கள் அனைவரும் சேர்ந்து ஒரே மாதிரி செய்யும் பயிற்சியைப் பற்றியது.

இந்த அதிகாரம் ஒரு மூலப்படையின் (Standing army) பயிற்சிகளையும் அப்பயிற்சிகளில்லாமல் அடைய முடியாத 'படைத்தன்மை'யையும் தான் சொல்லுவது. படையில் உள்ள போர்வீரர்களுடைய அறிவைப் பற்றியோ ஆற்றலைப் பற்றியோ சொல்லுவது அல்ல.

மேலும் போர் முறைகளைப் பற்றியும் இங்கே பேச்சில்லை. போர் முறைகளை அப்போதைக்கப்போதுள்ள நிலைமைகளை அனுசரித்து வேண்டியபடி மாற்றிக்கொள்ள ஒரு சேனை பயிற்சி பெற்றதாக இருக்கவேண்டும் என்பதை அடுத்த குறளில் சொல்லுகிறார். அது:

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து.

என்பது. இதன் பொருள்: அப்போதைக்கு வந்துள்ள போரின் தன்மையை அறிந்து, அதற்குத் தகுந்தபடி அணி வகுத்துக்கொண்டு பகைவர்மேற் செல்லத் தெரிந்திருப்பது சேனையாகும்—என்பது. சமயத்துக்கேற்றபடி வியூகம் வகுத்துக் கொள்ளப் பயிற்சி பெற்றதாக இருப்பதுதான் சேனை—என்பது கருத்து.

ஒரு சேனைக்கு வலிமை என்பது அதிலுள்ள ஆட்களின் வலிமை அல்ல. அந்த ஆட்களெல்லாம் சேர்ந்து செயலாற்றப் பழகியுள்ள படைத்தன்மைதான் சேனைக்கு வலிமை தருவது என்பதை அடுத்த குறளில் மிகவும் அழுத்தமாகச் சொல்லுகின்றார். அது:

அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்

என்பது. இதன் பொருள்: போர் புரியும் வலிமையும் திறமையும் இல்லாவிட்டாலும் சேனை அதனுடைய சேனைத் தன்மையினால் மட்டுமே பெருமை பெறும்—என்பது.

அதாவது, சேனையிலுள்ள தனிமனிதருக்குப் போர் புரியக் கூடிய திடமும் திறமையும் இல்லாவிட்டாலும் அவர்கள் எல்லாரும் சேர்ந்து செய்கிற சேனைத் தன்மையினால் அந்தச் சேனைக்கு ஒரு வல்லமை உண்டாகும் என்பது.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் சொல்லும் உரை: தானை, பகைமேற் றான் சென்றிடுந் தறுகண்மையும் அது தன்மேல் வந்தால் பொறுக்கும் ஆற்றலும் இல்லையாயி

னும், தன் தோற்றப் பொலிவானே பெருமை எய்தும் என்பது பதவுரை.

இதற்கு மேலும் அவர் சொல்லும் விளக்கமாவது:

'இல்லெனினும்' எனவே, அவற்ற தின்றியமை யாமை பெறப்பட்டது. 'படைத்தகை' என்றது ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது. தோற்றப் பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர், யானை, குதிரைகளுடனும், பதாகை, கொடி, குடை, பல்லியம், காகள முதலியவற் றுடனும் அணிந்து தோன்று மழகு. 'பாடு'—கண்ட வளவிலே பகைவர் அஞ்சும் பெருமை—என்பது விசேட உரை.

இந்தப் பதவுரை, விசேட உரை இரண்டையும் சேர்த்துப் பார்த்தால் இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் கொண்ட உரை: ஒரு சேனை, பகைவர்மேல் தானே படை யெடுத்துச் செல்லத் தைரியமும் பகைவர் தன்மேல் படை யெடுத்து வந்தால் அதை எதிர்த்து நிற்கும் திறமையும் இல்லாததாக இருந்தாலும் அந்தச் சேனை, அலங்காரம் செய்யப்பட்ட தேர், யானை, குதிரைகளுடனும் பதாகை கொடி, குடை பலவித வாத்தியங்கள் முதலியவற்றுடனும் அணிந்து காட்சியளிக்கும் அழகைக் கண்டே பகைவர்கள் அஞ்சுவார்கள்—என்பது.

இது சரியா என்பது மிகவும் கவனிக்கத்தக்கது. முதலில் அலங்காரம் செய்யப்பட்ட தேர், யானை, குதிரை களையும் பதாகை, கொடி, குடை, வாத்தியங்கள் முதலிய வற்றையும் மட்டும் கண்டு பகைவர்கள் அஞ்சிவிடுவார் களா? அந்தப் பகைவரும் சேனையுடன் உள்ளவர்க ளல்லவா? அவர்களிடத்தில் இந்த அலங்காரம் செய்யப் பட்ட தேர், யானை, குதிரை, குடை, கொடி முதலியவைகள் இல்லையா?

இந்த உரையின் மற்றப் பகுதிகள் எப்படியிருந் தாலும் இந்தக் குறளில் உள்ள 'படைத்தகை' என்றது 'ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது' என்று அந்தப் பதம் பயனற்றதாக விலக்கிவிடப்பட்டது மிகவும் விசனிக்கத் தக்கது. ஏனெனில் இந்தப் 'படைமாட்சி' என்ற அதி

காரத்திற்கு ஜீவனுக உள்ளது இந்தப் 'படைத்தகை' என்ற பதம்தான். படைக்கு மாட்சி தருவது இந்தப் படைத் தன்மைதான்; அலங்கரிக்கப்பட்ட தேர், யானை, குதிரைகள் முதலியவைகள் அல்ல. இந்தக் குறளுக்கு முன்னுள்ள ஏழு குறள்களும் இந்தப் 'படைத்தகை' என்பதை வலியுறுத்துவதற்கான முன்னுரைகளே யாகும்.

'படைத்தகை' என்பது 'படைக்குணம்' அதாவது சேனை என்பதற்குத் தகுதியுள்ள தன்மை. ஆயிரக்கணக் கான மனிதர்கள் சேர்ந்த ஒரு கூட்டம் சேனையென்பது. ஆயிரக்கணக்கான மக்கள் வெறும் கும்பலாகக் கூடுவது சேனையாகாது. வெறும் கும்பலாகக் கூடுகின்ற கூட்டத்தி லுள்ள ஆயிரம் மனிதர்களும் அவரவர்கள் இஷ்டம்போல் வெவ்வேறு காரியங்களைச் செய்துவிடலாம். ஆனுல், ஒரு சேனையிலுள்ள ஆயிரம் மனிதர்கள் அவரவர்கள் இஷ்டப் படி வெவ்வேறு காரியங்களைச் செய்ய முடியாது. அவர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரே மனிதனைப்போல் ஒரு சமயத்தில் குறிப்பிட்ட ஒரே காரியத்தைத்தான் செய்யவேண்டும். இதனுல், படையிலுள்ள பல மனிதர் களும் தங்கள் தங்கள் தனி மனிதத் தன்மையை விட்டு விட்டு எல்லோருமாகச் சேர்ந்த படைத்தன்மையை மேற் கொள்ளுகிருர்கள். இந்தப் படைத்தன்மைதான் 'படைத் தகை' என்பது.

இந்தப் 'படைத்தகைக்'கான செயல்கள்தாம் முன் குறள்களில் சொல்லப்பட்டவை. அவையாவன: யுத்தம் இல்லாத காலத்திலும் இடைவிடாமல் யுத்தப் பயிற்சி களைச் செய்துகொண்டிருப்பது. யுத்தம் வந்தால் 'அழி வின்றி அறைபோகாமல்' இருப்பது. கூற்றுடன்று மேல் வரினும் கூடி எதிர்நிற்றல்', 'மாண்ட வழிச்செலவு' என்ற வழி நடை, 'தலைவந்த போர்தாங்கும் தன்மை அறிந்து தார் தாங்கிச் செல்வது' முதலியன. ஒரு சேனைக்கு மிகவும் இன்றியமையாத இந்தப் படைத் தன்மை எந்தக் காலத்துச் சேனைக்கும் பொருந்தும். சேனையினுடைய வாகனங்களும், ஆயுதங்களும் போர்முறைகளும் காலத் துக்குக் காலம் மாறிப் போகலாம். ஆனுல், இந்தப்

படைத் தன்மை மாறுது. மாறிப்போகிற விஷயங்களை யெல்லாம் விட்டுவிட்டு மாறுததாகிய இந்தப் படைத் தன்மைக்கு வேண்டியதை மட்டும் தான் 'படைமாட்சி' யாகத் திருவள்ளுவர் சொல்லுகின்றுர். அதனுலும்தான் திருக்குறள் பொய்யா மொழியாகத் திகழ்கின்றது என்பதை விளக்கவே இந்த அதிகாரத்தைப் பற்றி இங்கே எழுதப்பட்டது.

இப்படி, காலத்திற்குக் காலம், இடத்துக்கிடம் மாறிப்போகிற விஷயங்களைப் பற்றிச் சொல்லும்போதும் அவற்றிலுள்ள மாறக்கூடிய பகுதிகளையெல்லாம் அறவே நீக்கிவிட்டு, எந்தக் காலத்துக்கும், எந்த இடத்திற்கும் எல்லா மனிதர்க்கும் பொருந்தக்கூடிய அறிவை மட்டும் புகட்டுவதால் திருக்குறளைப் 'பொய்யாமொழி' என்பது எவ்வளவு பொருத்தமானது என்பதை அனுபவிக்க இன்னெரு உதாரணம் பார்ப்போம்.

## மருந்து

'மருந்து' என்று ஒரு அதிகாரம் அங்கவியலில் சொல்லப்படுகிறது. 'மருந்து' என்றுல் 'நோய்க்குப் பரிகாரம்' அல்லது 'வியாதிக்கு வைத்தியம்' என்பது பொருள். வைத்தியத்தைப் பற்றிச் சொல்லப் புகுந்தால் எத்தனையோ விதமான வைத்திய முறைகளைப் பற்றிச் சொல்லவேண்டும். மருந்து என்பதைப் பற்றிச் சொன்னுலும் எண்ணிறந்த மருந்துகள் உள்ளன.

வைத்திய முறைகளில் 'ஆயுர்வேதம்,' 'யூனுனி' 'சித்தவைத்தியம்,' 'ஹோமியோபதி,' 'அல்லோபதி' முதலிய பல முறைகள் உள்ளன. இந்த முறைகளெல்லாம் திருவள்ளுவர் காலத்தில் இருந்தனவா என்று கேள்வி பிறக்கலாம். இந்தப் பெயர்களெல்லாம் திருவள்ளுவர் காலத்தில் இருந்திருக்க முடியாது என்றுலும் இப்படி வெவ்வேறு பெயர்களில் வெவ்வேறு வைத்திய முறைகள் திருவள்ளுவர் காலத்திலும் இருந்தனவென்பதில் ஐயமில்லை. இப்போதுள்ளவர்களுக்கு விளங்குவதற்காக இந்தப் பெயர்கள் சொல்லப்பட்டன.

இனி, மருந்துகளில் சூரணம், பஸ்மம், லேகியம், மெழுகு, தைலம், கஷாயம், பற்று, வேது, புகை முதலிய பல விதங்கள் உண்டு. நோய்களைப் பேசினாலும் எண்ணிறந்த நோய்கள் உள்ளன. 'மருந்து' என்ற பெயரில் சொல்லப்படுகிற இந்த அதிகாரத்தில் வைத்திய முறையைப் பற்றியோ மருந்துகளைப் பற்றியோ ஏதாவது கொஞ்சம் சொல்லப்படலாம் என்றே எண்ணச் செய்யும். ஆனால், திருவள்ளுவர் இந்த அதிகாரத்தில் வைத்திய முறைகளைப் பற்றியோ, வாகட நுணுக்கங்களைப் பற்றியோ, மருந்து வகைகளைப் பற்றியோ மறைமுகமாகவேனும் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. ஒவ்வொரு மனிதனும் தனக்கு நோய் வராமலிருக்கக் கவனித்துக்கொள்ளத்தக்க பொது விதிகளையும் நோய் வந்துவிட்டால் செய்யவேண்டிய ஒரே காரியத்தையும் சொல்லுகிறார். அது எந்தக் காலத்துக்கும் உதவக்கூடிய பொய்யா மொழியாக இருக்கிறது.

இது (வைத்தியர்களல்லாத) சாதாரண மக்களுக்கு இருக்கவேண்டிய நல்லறிவாகச் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், திருவள்ளுவர் மிக்க தீர்க்க தரிசனத்தோடு எல்லாருக்கும் பயனுள்ளதாக இருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் வெகு சுருக்கமாகச் சொல்லியிருக்கிற இந்த நல்லறிவு சாதாரண மக்களுக்குப் பயன்படும்படி இந்த அதிகாரத்துக்குச் செய்யப்பட்டுள்ள உரைகள் அமையவில்லை.

இந்த அதிகாரத்தில் திருவள்ளுவர் சொல்லுவதெல்லாம், ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உணவுக் கட்டுப்பாடுகளைக் கவனித்துக்கொண்டால் நோய் வராது; நோய் வந்துவிட்டால், சொந்த வைத்தியம் செய்து கொள்ளாமல் உடனே அதற்கென்று கற்றுப் பழகியுள்ள வைத்தியனைக்கொண்டு தக்க பரிகாரம் செய்து கொள்ளவேண்டும் என்பது மட்டும்தான். இந்த அதிகாரத்தின் பத்துக் குறள்களில் முதல் ஏழு குறள்களில் உணவுக் கட்டுப்பாடு மட்டும் சொல்லப்படுகிறது. மீதி மூன்று குறள்களிலும் நோய் வந்து விட்டால் நோயாளியை வைத்தியனிடத்தில் ஒப்படைத்துவிட

வேண்டும் என்பதுமட்டும்தான் சொல்லப்படுகிறது. உணவுக் கட்டுப்பாட்டைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ள விதிகளாவன: (1) ஆகாரங்கள் மிகுந்தாலும் குறைந்தாலும் நோயுண்டாகும். (2) ஒரு முறை உண்ட உணவு முற்றிலும் சீரணித்து விட்டதா என்பதைக் கவனித்துக் கொண்டு மறுமுறை உண்கின்றவனுக்கு நோயும் வராது, மருந்தும் வேண்டியதில்லை. (3) அதனால், ஒரு முறை உண்டதற்கும் மறு முறை உண்பதற்கும் இடையில் கழியவேண்டிய கால அளவை அறிந்து உண்டால் நீண்ட நாள் நோயின்றி வாழலாம். (4) ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய தேகத்துக்கு ஒத்துக்கொள்ளாத உணவுகளை ஆராய்ந்து அவற்றை விலக்கவேண்டும். எப்போதும் நன்றாகப் பசியெடுத்த பிறகுதான் உண்ணவேண்டும். (5) தேகத்துக்கு ஒத்துக்கொள்கிற உணவையும் நாக்கு ருசிக்காக அதிகமாக உண்டுவிடக்கூடாது. (6) உண்ட அளவுக்குத் தக்கபடி மலம் கழிந்துவிட்டதா என்பதைக் கவனிக்காமல் மலம் கழியாமலேயே மேலும் மேலும் அடைக்கிறவனுக்கு எப்போதும் நோய்கள் இருந்து கொண்டேயிருக்கும். (7) ஒவ்வொரு மனிதனும் தனக்குள்ள சீரண சக்தியை அளந்துகொண்டு அதற்குத்தக்க அளவோடு உண்ணவேண்டும். அந்த அளவுக்கு மீறினால் நோயும் அளவுக்கு மீறி உண்டாகும். இந்த விதிகளைக் கவனித்துக்கொண்டால் நோயின்றி வாழலாம். இந்த விதிகள் நோய் வராமல் காத்துக்கொள்ள 'மருந்து.'

நோய் ஏதேனும் வந்துவிட்டால் உடனே செய்ய வேண்டியது என்னவென்றால் (8) நோயை இன்னதென்று அறியக்கூடியவனாகவும் அந்த நோயின் காரணத்தைக் கண்டறியக்கூடியவனாகவும் அதற்குத் தகுந்த பரிகாரம் செய்து நோயைத் தீர்க்கத் தெரிந்தவனாகவும் உள்ள ஒரு வைத்தியனை நாடி வேண்டியதைச் செய்ய வேண்டும். (9) அதன் பிறகு நோயாளியின் நிலைமையையும் நோயின் அளவையும் கால நிலையையும் ஆராய்ந்து அதற்கேற்ற சிகிச்சை செய்யவேண்டியது மருத்துவத் தொழிலைக் கற்றுள்ள வைத்தியன் கவனிக்க வேண்டிய வேலை. (மற்றவர்களுடைய வேலையல்ல).

(10) வைத்தியனிடத்தில் நோயாளியை ஒப்படைத்த பிறகு நோயாளி, வைத்தியன், வைத்தியனுடைய சிகிச்சை நோயாளிக்கு அருகிலிருந்து கொண்டு பத்தியம் காக்கச் செய்து உதவி செய்கிற பணியாள் (Nurse) ஆகிய இந்த நான்கு பகுதிகளும் சேர்ந்ததுதான் வைத்தியம்.

இனி, இவ்வதிகாரத்தின் பத்துக் குறள்களையும் தனித் தனியே ஆராய்வது மிகவும் பயனுடையது.

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

இதற்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை: உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த அளவினவன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும், ஆயுள்வேத முடையாரால் வாதம் முதலாக எண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத் துன்பஞ் செய்யும்—என்பது பதவுரை.

இதற்கு விளக்கமாக அவர் தந்துள்ள விசேட உரை யாவது: நூலோர் எண்ணியவெனவே, அவர் அவற்றான் வகுத்த வாதப்பகுதி, பித்தப்பகுதி, ஐப்பகுதி என்னும் பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றில் குணவொத்த லாவது சுவை வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்களொத்தலாவது மனமொழி மெய்களால் செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். இவை இரண்டும் இங்ஙனமின்றி மிகுதல் குறைதல் செய்யின், அவை தத்தம் நிலையில் நில்லாவாய் வருத்துமென்பதாம். காரணமிரண்டும் அவாய் நிலையான் வந்தன. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. இதனால் யாக்கைகட்கு இயல்பாகிய நோய் மூவகைத் தென்பதூ உம். அவை துன்பஞ் செய்தற்காரணம் இருவகைத் தென்பதூஉம் கூறப்பட்டன.—என்பது விளக்க உரை.

இந்த விளக்க உரை முழுதும், திருக்குறளைப் படித்துப் பயனடையவேண்டிய சாதாரண மக்களுக்கு அவசியமில்லாத வாகட சாஸ்திர நுணுக்கங்கள். இந்த விசேட உரை ஒருபுறமிருக்க மூலத்தின் உரையைக் கவனிப்போம்;

'மிகினும் குறையினும்' என்பதற்கு 'உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கு ஒத்த அளவின்றி அதனின் மிகுமாயினும், குறையுமாயினும், என்றுபொருள் செய்யப் பட்டிருக்கிறது. இதில் உணவைச் சொன்னது சரி. இந்த அதிகாரம் உணவைப்பற்றித்தான் சொல்லுகிறது. ஆனால் செயலையும் சேர்த்துக்கொள்ள இதில் எங்கே இடமிருக் கிறது? மேலும் உணவுசுவையிலும் வீரியத்திலும் குறையா மலும் அதிகப்படாமலும் இருப்பதென்றால் என்ன? அத் துடன் மனம் மொழி மெய்களால் செய்யும் தொழில்கள் மிகுதலும் குறைதலும் இல்லாமல் இருக்க வேண்டும் என்பது என்ன? மன மொழி மெய்களால் செய்யும் எண்ணிறந்த செயல்களில் எந்தச் செயல் மிகாமலும் குறையாமலும் இருக்கவேண்டும்—நோயில்லாமலிருக்க? பின்னும், 'ஒருவனுடைய உணவும் செயல்களும் அவனு டைய பகுதிக்கு ஒத்த அளவினவன்றி அதைவிட மிகுந் தாலும் குறைந்தாலும் வாத பித்த சிலேட்டும நோய்கள் வந்து துன்பம் செய்யும் என்று சொல்லிவிட்டுப் 'பகுதி' என்பதற்கு 'வாதப் பகுதி, பித்தப் பகுதி, ஐப்பகுதி' என்று சொல்லப் பட்டிருக்கிறது. இதனால் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய பகுதி வாதப்பகுதியா, பித்தப் பகுதியா, ஐப்பகுதியா என்பதை அறிந்துகொண்டு, அந்தப் பகுதிக்கு ஒத்த அளவினவன்றி அவனுடைய உணவும் செயல்களும் அதிகப்படாமலும் குறையாமலும் இருக்கப்பார்த்துக் கொள்ளவேண்டும் என்பது பொருளா கின்றது. இது யாராலும் செய்யக்கூடிய காரியமா? இப்படி ஒரு உபதேசம் செய்யலாமா? இது வெறும் வைத்திய சாஸ்திர அறிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. என்றாலும் இந்த அறிவு வைத்தியத் தொழிலாளருக்கு மட்டுந்தானே வேண்டியது. திருக்குறளைப் படிக்கும் சாதாரண மக்களுக்கு இதனால் என்ன பயன்? பயனில் லாமல் இருப்பதுமட்டுமன்றி படிப்பவர்களுக்குக் குழப்ப மும் பயமும் அல்லவா உண்டாகும். அன்றியும் வாகட சாஸ்திர வார்த்தைகளைக் கூடச் சொல்லாமல், நோய் வராதபடி வாழ்வதற்கான சில எளிதான விதிகளை மட்டுமே சொல்லவேண்டுமென்று வெகு கூர்மையான தீர்க்க தரிசனத்துடன் அந்த அதிகாரத்தை எழுதி

யிருக்கிற திருவள்ளுவருடைய நோக்கத்திற்கு இது ஒரு சிறிதும் ஒத்துக்கொள்ளாது.

இந்த உரையில் மிகவும் சிந்திக்கவேண்டிய பகுதி எதுவெனில், 'வளிமுதலா வெண்ணிய மூன்று' என்ற சொற்றொடர். 'வளிமுதலா மூன்று' என்பதற்கு 'வாதம் முதலாகிய மூன்று' என்று கொண்டு, இதற்கு 'வாதம், பித்தம், சிலேட்டுமம்' என்று பொருள் கூறப்பட்டிருக் கிறது. 'வளி' என்ற பதத்திற்கு 'காற்று' அல்லது 'வாயு' என்பது மட்டும்தான் பொருள். 'வாதம்' என்பது நேரான பொருளல்ல. ஆனால் இந்த அதிகாரத் தின் பெயர் 'மருந்து' என்றிருப்பதாலும், வைத்திய சாஸ்திரப்படி 'வாதம்' என்பது வாயு சம்பந்தமான நோய் என்பதனாலும் இப்படிக் கூட்டிப் பொருள் கொண்டுவிட்டது குற்றமல்ல. எனினும் இந்த 'வளி முதலா மூன்று' என்பதற்கு 'வாத, பித்த, சிலேட்டுமம்' என்ற மூன்று வைத்தியச் சொற்களைத்தாம் திருவள்ளுவர் கருதியிருக்கிறாரா என்பதுதான் இங்கே கவனிக்கவேண் டியது. திருவள்ளுவர் அப்படிக் கருதவில்லை என்பதை இந்த அதிகாரத்திலுள்ள மற்ற ஒன்பது குறள்களும் காட்டுகின்றன. நோய் வராமலிருப்பதற்கு உணவு பற்றிய விதிகளைக் கவனித்தால் போதும் என்று சொல்லி, நோய் வந்துவிட்டால் உடனே அந்த நோயின் காரணத்தைக் கண்டறிந்து வேண்டியதைச் செய்யத் தெரிந்த வைத்தியனிடம் தெரிவித்துப் பரிகாரம் செய்து கொள்ளவேண்டும் என்பதை மட்டும் சொல்லுகின்ற வள்ளுவர், வைத்தியத் தொழிலாளிக்கு மட்டும் புரியக் கூடிய இந்த 'வாத, பித்த, சிலேட்டுமம்' என்பனவற் றைக் கருதியிருக்கமாட்டார். அந்த நுணுக்கங்களை அதற் கென்றே வைத்தியத் தொழிலைச் செய்யக் கற்றவனான 'நோய் நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும்' வைத் தியனே கருத வேண்டியது என்பதுதான் வள்ளுவரின் கருத்து. திருவள்ளுவர் தம்மை ஒரு வைத்தியனாக எண் ணிக்கொண்டு இந்த அதிகாரத்தை எழுதவில்லை. முதிர்ந்த அனுபவம் நிறைந்த பொது அறிவாகத்தான் இது சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையினல் 'வளிமுதலா மூன்று' என்பதற்குச் சாதாரண மனிதர்கள் எல்லாருக்கும் புரியக்கூடிய வேறு பொருளைத்தான் திருவள்ளுவர் கருதியிருக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தானே கவனித்துக்கொள்ள வேண்டியது உணவைப் பற்றிய விதிகள் மட்டுந்தான். நோய் வந்துவிட்டால் அதைக் கவனிக்கவேண்டியவன் வைத்தியனேயன்றி தானும் அல்ல, மற்றெவரும் அல்ல என்பதுதான் அவ்வதிகாரம் புகட்டுவது. இந்தக் குறளுக்கு அடுத்த ஆறு குறள்களும் ஆகார நியதி ஒன்றைத்தான் விளக்குகின்றன. ஆகையினல் இந்தக் குறள் அந்த ஆகாரத்தைப் பற்றிய முன்னுரையாகத் தான் இருக்கவேண்டும். அந்த உத்தியோடு இந்தக் குறளைக் கவனித்தால் இந்த 'வளி முதலா மூன்று' என்பது என்னவென்று எல்லாரும் அறிந்துகொள்ளக் கூடிய மிக நல்ல பொருள் வெகு எளிதாகக்கிடைக்கிறது. மீண்டும் அக்குறளைப் பார்ப்போம் :

> மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
> வளிமுதலா எண்ணிய மூன்று.

இந்தக் குறளின் வசனநடை : நூலோர் எண்ணிய வளி முதலா மூன்றும் மிகினும் குறையினும் நோய் செய்யும்—என்பது. இதன் பொருள் : நூல்களைக் கற்ற அறிஞர்கள் ஆராய்ந்து சொல்லியிருக்கிறபடி நாம் உண்ணுகின்ற காற்று முதலாகிய மூன்று உணவுகளும் மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாகும்—என்பது.

நாம் மூன்று உணவுகளை உட்கொள்ளுகின்றோம். அவை காற்று, நீர், சோறு. மூச்சுக்காகக் காற்றையும் இரத்த ஓட்டத்துக்காக நீரையும் உடலுறுதிக்காகச் சோறு காய்கறி முதலியவற்றையும் உட்கொள்ளு கின்றோம். இந்த மூன்று உணவுகளும் மிகுந்தாலும் குறைந்தாலும் நோயுண்டாகும் என்பது எச்சரிக்கை.

இந்த மூன்று உணவுகளுள் மூன்றாவது உணவாகிய சோறு காய்கறிகளாகிய ஆகாரங்களில்லாமலும் பல நாள் உயிரோடிருக்கலாம். இரண்டாவது உணவாகிய நீர்

இல்லாமலும் சில நாள் உயிரோடிருக்கலாம். ஆனுல் முதல் உணவாகிய காற்றில்லாமல் சில நிமிஷங்கள்கூட உயிரோடிருக்க முடியாது. அதனுல் நம்முடைய முதல் உணவு காற்ருக 'வளி முதலா மூன்று' எனப்பட்ட தாகக் கொள்ளவேண்டும் என்பது 'வளி' என்பதற்கு 'வாதம்' என்று பொருள் செய்வதினும் சிறந்தது.

காற்று, நீர், சோறு ஆகிய மூன்று உணவுகளும் மிகுந்தாலும் குறைந்தாலும் நோயுண்டாகும் என்பது உண்மை யானுலும் பெரும்பாலும் நோய்களுக்குச் காரணம் மூன்ருவது உணவாகிய சோறு, காய்கறி, பலகாரங்கள் முதலிய வயிற்றுக்குள் போகிற உணவுதான் என்பது அனுபவம். அந்த வயிற்றுணவும்கூடக் குறை வதனுல் உண்டாகும் நோய்களைவிட மிகுவதனுலேயே நோய்கள் உண்டாகின்றன என்பதும் வெளிப்படை. காற்றையும் நீரையும் நாம் அளவுக்குமீறி உட்கொள்ளுவ தில்லை. சுவாசத்தை அளவுக்கு மீறி யாரும் இழுத்துக் கொள்வதில்லை. நீரும், தாகம் எவ்வளவோ அவ் வளவுக்கு மேல் செல்லாது. ஆனுல் வயிற்றுணவுதான் நாக்குக்குள்ள சுவை ஆசையால் அளவுக்கு மீறி உண்டு விட நேருகின்றது, உணவுண்டு பசியடங்கிய பின்னும் நாக்கின் சுவை ஆசையால் அடுத்தடுத்துப் பல தின் பண்டங்களையும் உட்கொண்டுவிடுகிருேம். இந்த வயிற் றுணவின் கட்டுப்பாட்டைத்தான் இந்த அதிகாரம் வலி யுறுத்துகின்றது. அடுத்த குறளில் அதை விளக்குகிருர்:

> மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
> அற்றது போற்றி உணின்.

இதன் வசனநடை: யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின், மருந்தென்ப வேண்டாவாம்.

இதன் பொருள்: உடல் வளத்துக்காக உண்ணப் படுகிற வயிற்றுணவுகள் சீரணமாகி விட்டதைக் கவனித்து உண்டால் மருந்துகளே வேண்டியதில்லை— என்பது.

இந்தக் குறளை, 'அருந்தியது அற்றது போற்றி உணின் யாக்கைக்கு மருந்தென்ப வேண்டாவாம்' என்று

கூட்டி, 'சாப்பிட்டது சீரணமானதைக் கவனித்து மறுபடியும் சாப்பிட்டால் உடம்புக்கு மருந்துகளே வேண்டியதில்லை' என்று பொருள் கொள்வதும் பொருத்தமானதே. என்றாலும் 'யாக்கைக் கருந்தியது' என்ற சொற்றொடரை அப்படியே பிரிக்காமல் வைத்துக் கொண்டு 'உடல் வளத்துக்காக உண்ணப்படுவது' என்று பொருள் செய்வது சிறப்புடையது. ஏனென்றால் வயிற்றில் நிரப்பப்படுகிற உணவுதான் யாக்கைக்காக—உடல் வளத்துக்காகப் பயன்படுவது.

எப்படிப் பொருள் கொண்டாலும் 'ஒரு தரம் உண்டது முற்றிலும் சீரணமாகி விட்டதைக் கவனித்தே மறுதரம் உண்ணவேண்டும். அப்படிச் செய்தால் நோய் வராது' என்ற உணவு பற்றிய முதல்விதி இந்தக் குறள். அடுத்த குறள்:

> அற்றால் அளவறிந்து உண்க அஃதுஉடம்பு
> பெற்றான் நெடிது உய்க்குய்ஆறு

இதன் பொருள்: சீரணமாவதற்கு வேண்டிய கால அளவை அறிந்து கொண்டு அதற்கிணங்க அடுத்த உணவை உண்ண வேண்டும். அப்படிச் செய்வது (அரிதாகக் கிடைத்த) மானிட உடம்பை நெடுங்காலம் அனுபவிக்கும் வழி.

இது உணவைப் பற்றிய இரண்டாவது விதி. அடுத்த குறள் சீரணமாவதற்கு வேண்டிய இடைவேளைக் கால அளவை கவனிப்பது மட்டும் போதாது; அத்துடன்:

> அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
> துய்க்க துவரப் பசித்து.

இதன் பொருள்: சீரணமானதை அறிந்துகொண்டு அத்துடன் உன் தேகத்துக்கு ஒத்துக்கொள்ளாத உணவுகளை அனுபவத்தால் அறிந்து உறுதியாக அவற்றை விலக்கவேண்டும். எப்போதும் நன்றாகப் பசியெடுத்த பிறகே சாப்பிட வேண்டும்—என்பது. சீரணத்துக்கு வேண்டிய கால அளவு கடந்துவிட்டது மட்டும் போதாது. நல்ல பசி வந்த பிறகே உண்ணவேண்டும்

என்பது குறிப்பிடத் தகுந்தது. இது உணவைப் பற்றிய மூன்ருவது விதி. அப்படி மாறுபாடில்லாத உணவு களையே நன்ருகப் பசியெடுத்து உண்டாலும்:

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு.

இதன் பொருள் உன் தேகத்துக்கு மாறுபட்டனவா இல்லாமல் ஒத்துக் கொள்ளுகிற உணவுகளையும் பெருந் தீனியாக உண்டு விடாமல் பார்த்துக்கொண்டால், உடலுக்கு நோய் வராது; உயிர் துன்பப்படாது.

இது உணவுக் கட்டுப்பாட்டின் நான்காவது விதி. இதற்கடுத்த குறள் மிகவும் முக்கியமான விதியைச் சொல்லுகிறது. அதாவது:

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்.

இதன் வசன நடை: இழிவறிந்து உண்பான்கண் இன்பம் நிற்கும்; அதுபோல் கழிபேரிரையான்கண் நோய் நிற்கும்.

இதற்குப் பரிமேலழகர் தரும் உரை: உணவு குறை தலை நன்றென்றறிந்து அவ்வாறே உண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலை நிற்குமாறு போல மிகப் பெரிய இரையை விழுங்குவான் மாட்டு நோய் நீங்காது நிற்கும்—என்பது.

இது சரியான பொருளல்ல. ஏன் எனில், ஆகாரம் குறைவாக இருந்துவிட்டால் குற்றமில்லை யென்ருலும் குறைவாக இருக்கவேண்டும் என்பது விதியாகாது. ஆகாரம் அதிகமாகக்கூடாது என்பதுதான் விதியாகலாம். மேலும் எப்போதும் ஆகாரம் வேண்டிய அளவுக்குக் குறைவாக இருந்தாலும் ஆரோக்கியம் இருக்காது. இந்த அதிகாரத்தின் முதற்குறளுக்குப் பரிமேலழகர் செய்திருக்கிற உரையில் 'உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கு ஒத்த அளவினவன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும் ஆயுள் வேதமுடையாரால் வாதம் முதலாக எண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத்

துன்பம் செய்யும்' என்றபடியே உணவு எப்போதும் குறைவாகவே இருந்தாலும் நோயுண்டாகும். ஆகையால் குறளிலுள்ள 'இழிவறிந்து' என்பதற்கு 'ஆகாரக் குறைவை அறிந்து' என்று பொருள் கொள்வது சரியல்ல. இங்குள்ள 'கழிபேரிரை' என்பது வயிற்றில் அடைபட்டிருக்கிற இரையைக் குறிப்பது. உண்ணப் போகிற உணவையல்ல. அதனுல் 'இழிவு' என்பதற்குக் 'குறைவு' என்ற பொருள் இங்கே பொருந்தாது. 'இழிவு' என்பதற்குக் 'கழிவு' என்று பொருள். 'இழிவறிந்து' என்பதற்குக் 'கழிவை அறிந்துகொண்டு' என்பதுதான் இங்கே சரியான பொருள். இப்போது இந்தக் குறளின் பொருள்: மலம் கழிந்ததை அறிந்துகொண்டு உணவு கொள்பவனிடத்தில் ஆரோக்கியம் இருக்கும். அதுபோல மலக்கழிவைக் கவனிக்காமல் மேலும் மேலும் உணவை வயிற்றிலடைப்பவனிடத்தில் நோய் இருக்கும்—என்று விளங்குகிறது.

'இழிவறிந்து' என்பதற்கு 'மலக் கழிவைக் கவனித்துக் கொள்ளவேண்டும்' என்பதோடு மட்டும் பொருள் கொண்டு, காலா காலத்தில் மலங்கழிக்க வேண்டும் என்ற சுகாதார விதியைக் குறிப்பதாக மட்டும் கொள்ளாமல், இன்னும் சிறிது விரித்துப் பொருள் கொண்டாலும் பொருந்தும். அதாவது 'இழிவறிந்து உண்பான்' என்பதற்கு 'மலக்கழிவை அறிந்து அதற்குத் தக்கபடி அடுத்த உணவருந்துகிறவன்' என்று பொருள் கொண்டு, மலம் கழித்தாகி விட்டதா என்பதைக் கவனித்துக்கொள்வதோடு, அந்த மலஜலக் கழிவில் ஏதாவது மாறுதல் இருக்கிறதா என்பதையும் கவனித்து, ஏதேனும் குற்ற மிருந்தால் அதற்குத் தக்கபடி அடுத்த உணவை மாற்றிக்கொள்ளவேண்டும்—என்றும் விரித்துக் கொள்ளலாம். எப்படியானுலும் 'இழிவறிந்து' என்பதற்கு 'மலக் கழிவை அறிந்துகொண்டு' என்ற பொருள் செய்ய வேண்டுமென்பதுதான் முக்கியம். ஆகவே காலா காலத்தில் மலங்கழிந்ததைக் கவனிக்காமல் மேலும் மேலும் உண்டு வயிற்றிலடைக்கக் கூடாது என்பது உணவுக் கட்டுப்பாட்டின் ஐந்தாவது விதி.

உணவைப்பற்றிய கடைசி விதியாக, ஒவ்வொரு வரும் அவரவர்க்குள்ள சீரண சக்தியின் அளவுக்குஅதிகப் படாமல் உணவு கொண்டால் நோய் வராது என்பதை

தீயளவு அன்றித் தெரியான் பெரிதுஉண்ணின்
நோய்அளவு இனறிப் படும்

என்ற குறளில் சொல்லுகிறார். இதன் பொருள்: தனக் குள்ள சீரணத் தீயின் அளவுக்கு அல்லாமல், தெரியாமல் அதிகமாக உண்டால் நோயும் அதற்குத் தகுந்தபடி அதிகம் உண்டாகும்—என்பது. அதாவது, ஒவ்வொரு வனும் தனக்குள்ள சீரணசக்தி எவ்வளவு என்பதை நிதானித்தறிந்துகொண்டு அந்த அளவுக்கு உணவு கொள்ளும் விதியை எவ்வளவுக்கெவ்வளவு கவனித்துக் கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு நோயில்லை. அந்த விதியை எவ்வளவுக்கெவ்வளவு கவனிக்காமல் அதிகமாக உண்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு நோயுண்டாகும் என்பது. இந்த விதி எல்லாராலும் எளிதில் கடைப் பிடிக்கக்கூடியது. ஏனெனில் சிறிது கவனம் செலுத் தினால் எல்லாரும் அவரவர்க்குள்ள சீரண சக்தி எவ்வளவு என்பதை அறிந்துகொள்ள முடியும்.

இதுவரையும் சொல்லி வந்தது எல்லாம் உணவுக் கட்டுப்பாட்டைப் பற்றிய விதிகளேயாகும். இந்த விதிகளைக் கவனித்துக் கொண்டால் நோய் வராது. இவ் விதிகள், எல்லாரும் தாமே கவனித்துக் கொள்ளக்கூடிய —நோய்கள் வராமல் தடுக்கும் 'மருந்து.'

நோய் வந்துவிட்டாலோ அதற்கு 'மருந்து' நம் மால் தீர்மானிக்க முடியாது. அதற்கு வைத்தியனிடம் தான் போகவேண்டும் என்பதை வெகு அழுத்தமாக அடுத்த குறளில் சொல்லுகின்றார். அடுத்த குறள்:

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்

இதற்குப் பரிமேலழகர் தரும் உரை: 'மருத்துவனா யினான் ஆதுரன் மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து, பின் அது வருதற்

காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கு முபாயத்தினை அறிந்து அதனைச் செய்யும் வழிப் பிழை யாமற் செய்க'—என்பது.

இது சரியல்ல. இந்தக் குறள் வைத்தியனுக்குப் புத்திமதியாகச் சொல்லப்பட்டதல்ல. நோய் வந்தவன் என்ன செய்யவேண்டும் என்பதுதான் இங்கே சொல்லப் படுவது. இந்த அதிகாரம் முழுதும் நோயைத் தடுக்க வும் நோய் வந்துவிட்டால் அதைத் தீர்த்துக்கொள்ளவும் மக்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைத்தான் சொல்லுகிறது. அதனால், இந்தக் குறளுக்குத் திரு வள்ளுவர் கருதிய பொருள் என்ன வென்றால்: 'உனக்கு நோய் வந்துவிட்டால், நோய் இன்னதென்று அறிந்து, அது வந்த காரணத்தைக் கண்டறிந்து, அந்நோயைத் தணிக்கக்கூடிய வைத்தியனிடம் போய் வேண்டியதைச் செய்து கொள்க-' என்பதுதான்.

'இதிலுள்ள 'வாய் நாடி' என்பதற்கு 'இடத்தைத் தேடியடைந்து' அல்லது 'இடத்தை அறிந்து' என்பது பொருள். 'வாய்' என்பதற்கு 'இடம்' என்பது பொருள். 'நோய் நாடி', 'நோய் முதல் நாடி' என்ற இரண்டும் 'தணிக்கும்' என்ற சொல்லைத் தழுவும் வினை யெச்சங்கள். 'தணிக்கும்' என்ற சொல் 'வாய்' என்ற சொல்லைத் தழுவி நிற்பது. அதனால், 'நோயை ஆராய்ந்து, அது வந்த காரணத்தையும் ஆராய்ந்து, அந் நோயைத் தணிக்கக் கூடிய இடத்தை நீ தேடியடைந்து, செய்ய வேண்டிய பரிகாரத்தைச் செய்து கொள்' என்பதுதான் சரியான பொருள்.

நோய் வந்த உடனே வைத்தியம் கிடைக்கக்கூடிய இடத்துக்குப் போய்விட்டால் நோயாளியின், நிலைமையும் தெரிந்து அதற்கேற்ற பரிகாரத்தையும் செய்ய வேண்டியது அதற்கென்றே வைத்தியத் தொழிலைக் கற்றுள்ள பண்டிதனுடைய வேலை (மற்றவர்களுடைய வேலையல்ல) என்பதை அடுத்த குறளில் சொல்லுகின்றார்:

உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

இந்தக் குறளும் வைத்தியனுக்கு உபதேசமாகச் சொல்லப்பட்டதல்ல. நோயாளிக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும், நோயாளியை வைத்தியனிடம் கொண்டு போக வேண்டியது ஒன்றுதான் அவர்களுடைய வேலை. மற்றவெல்லாம் வைத்தியத் தொழிலைக் கற்றவனாகிய மருத்துவனுடைய வேலையாக விட்டு விடவேண்டும் என்பதற்காகச் சொல்லப்பட்டது.

இக்குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை: ஆயுள் வேதத்தினைக் கற்ற மருத்துவன், அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுரன் அளவினையும் அவன்கண் நிகழ்கின்ற நோயின் அளவினையும் தன் செயற்கேற்ற காலத்தினையும் அந்நூனெறியால் நோக்கி, அவற்றோடு பொருந்தச் செய்க'—என்பது.

இது வைத்தியனுக்கு இடப்பட்ட கட்டளைபோல் இருக்கிறது. மேலும் இதற்கு அவர் சொல்லும் விசேட உரை: ஆதுரன் அளவு: பகுதி பருவம் வேதனை வலிகளினளவு. பிணியளவு: சாத்தியம், அசாத்தியம், யாப்பியம் என்னும் சாதி வேறுபாடும், தொடக்க நடுவீறென்னும் அதன் பருவ வேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம் மேற் சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்க வென்பார், 'கற்றான் கருதிச் செயல்' என்றார். இவையிரண்டு பாட்டானும் அவ்விழுக்குப் பட்டுழி மருத்துவன் தீர்க்குமாறு கூறப்பட்டது என்பது விசேட உரை.

இதுவும் வைத்தியனுக்கு அவனுடைய தொழில் முறையைப் புகட்டுவதுபோல் இருக்கிறது. ஏற்கெனவே இவற்றை யெல்லாம் 'கற்றான்' ஆகியுள்ள வைத்தியனைப் பற்றித்தான் இங்கே சொல்லப்படுகிறது. ஆதலால் இந்தக் குறளும் இதற்கு முந்திய குறளைப் போலவே பொது மக்களுக்குச் சொல்லப்பட்டதே யன்றி வைத்தியனுக்குச் சொல்லப்பட்டதல்ல.

இந்தக் குறளின் அர்த்தம்: நோயாளியினுடைய வயசு தேக வலிமை முதலியவற்றையும், நோய்

அப்போது தான் ஆரம்பிக்கிறதா அல்லது முற்றிவிட்டதா என்கிற நோயின் வலிமையையும், எந்தச் சிகிச்சையை எப்போது செய்ய வேண்டுமென்ற கால நிலைமையையும் கவனித்து அவற்றிற்குத் தக்கபடி பரிகாரம் செய்ய வேண்டிய வேலை அதற்கென்று கற்றுள்ளவனாகிய வைத்தியனுடையது. (அதனால் நோயாளியை வைத்திய னிடம் ஒப்படைத்துவிடு. மற்றவர்கள் செய்யக்கூடியது ஒன்றுமில்லை)—என்பதுதான்.

இந்தக் குறளுக்கு இவ்வளவுதான் பொருள் என்பதை அடுத்த குறள் உறுதிப்படுத்துகிறது. அதாவது:

உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.

இதன் இயல் நடை: அப்பால் உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான் என்ற நாற்கூற்றே மருந்து— என்பது.

இதன் பொருள்: (நோயாளியை வைத்தியனிடம் ஒப்படைத்ததற்கு) அப்பால் நோயாளி, வைத்தியன், அவன் தரும் மருந்து, (அந்த மருந்தை நோயாளியின் அருகில் இருந்துகொண்டு நோயாளிக்குக் கொடுத்துப் பத்தியம் கவனித்துக் கொண்டு) துணைபுரிகின்ற—(நர்ஸ்) என்ற நான்கு பகுதிகளின் கூட்டுறவே வைத்தியம்.

இந்தக் குறளிலுள்ள முதல் 'மருந்து' என்பதற்கு 'வைத்தியன் தருகின்ற மருந்து' என்பது பொருள். இரண்டாவது 'மருந்து' என்பதற்கு 'வைத்தியம்' என்பது பொருள். நோயாளி, வைத்தியன், மருந்து, பக்கத்தி லிருக்கும் 'நர்ஸ்' ஆகிய இந்த நான்கும் சேர்ந்து அதனதன் காரியத்தைச் சரியாகச் செய்தால் அதுதான் வைத்தியம்—என்ற உண்மையை இன்றைக்குள்ள வைத்திய நிலையங்களின் கட்டுத்திட்டங்களிலும் காணலாம்.

எனவே, இந்த 'மருந்து' என்ற அதிகாரம், மருந்து வகைகளைப் பற்றியோ, வைத்திய முறைகளைப் பற்றியோ சொல்லாமல், நோய் வராமலிருக்க உணவு விதிகளைக்

கவனிக்கவேண்டும் என்பதையும், நோய் வந்துவிட்டால் வைத்தியனிடம் சொல்லிப் பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும் என்பதையும் மட்டுமே சொல்லுகிறது. அதனுல் இது எல்லா மனிதருக்கும் எக்காலத்திலும் உதவக்கூடிய 'பொய்யாமொழி'யாகப் போற்றத் தகுந்த தாகிறது.

இந்தக் குறளிலுள்ள 'நாற்கூற்றே மருந்து' என்ப தற்கு 'நோயாளி, வைத்தியன், மருந்து, உழைச் செல் வான்' என்ற நான்கும் சேர்ந்ததுதான் வைத்தியம் என்பது மட்டுந்தான் இங்கே கருதப்பட்ட பொருள். 'நாற்கூற்றே' என்பதன் ஈற்றிலுள்ள 'ஏ'காரம் உறுதிப் பொருளில் நிற்கிறது.

ஆனுல், இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை, இந்த 'மருந்து' என்ற அதிகாரத்தின் நோக்கத் துக்கு ஒத்ததாக அமையவில்லை. அந்த உரையைப் பார்ப்போம்.

உற்றவன் தீர்ப்பான் மருந்து உழைச்செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.

இதற்குப் பரிமேலழகரின் பதவுரையாவது:

மருந்து-பிணிக்கு மருந்தாவது; உற்றவன்-அதனை யுற்றவன்; தீர்ப்பான்-அதனைத் தீர்க்கும் மருத்துவன்; மருந்து-அவனுக்குக் கருவியாகிய மருந்து; உழைச் செல் வான் என்ற அப்பால் நாற்கூற்று-அதனைப் பிழையாமல் இயற்றுவானென்று சொல்லப்பட்ட நான்கு பகுதியை யுடைய நான்கு திறத்தது.

இதற்கு விளக்கமாகப் பரிமேலழகர் தரும் விசேட உரையாவது: நான்கென்னு மெண் வருகின்றமையின், அது நோக்கி 'அப்பா'லென் றெழிந்தார். நாற்கூற்ற தென்பது விகாரமாயிற்று. அவற்றுள் 'உற்றவன்' வகை நான்காவன: பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலை யுணர்த்தல் வன்மை, மருத்துத் துன்பம் பொறுத்தலென விவை 'தீர்ப்பான்' வகை நான்காவன: நோய் கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய

கல்வியு நுண்ணறிவுமுடைமை, பலகாலுந் தீர்த்துவருதல், மன மொழி மெய்கள் தூயவாத லெனவிவை. 'மருந்' தின் வகை நான்காவன: பல பிணிகளுக்கு மேற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதினெய்தப் படுதல், பகுதியோடு பொருந்துத லெனவிவை. இயற்று வான் வகை நான்காவன: ஆதுரன்மாட் டன்புடைமை, மனமொழி மெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமை யெனவிவை. இவை யெல்லாங் கூடிய வழியல்லது பிணி தீராமையின், இத்தொகுதியையும் 'மருந்' தென்றார். ஆயுள்வேத முடையாரும் இவை கால்களாக நடக்குமென்பதுபற்றிப் பாதமென்றும், இவை மாறுபட்ட வழிச் சாத்தியமு முதிர்ந்து அசாத்தியமாமென்றுங் கூறினர். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவன வெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டன. இது விசேட உரை.

இந்த விசேட உரையிற் சொல்லப்பட்டுள்ள விஷயங்கள் எவ்வளவு சிறந்த ஆயுள்வேத சாஸ்திரத்தைச் சேர்ந்தவையானாலும் இந்த இடத்தில் அவை முற்றிலும் வேண்டாத விஷயங்கள்; திருவள்ளுவர் இவற்றைக் கருதியிருக்கவே மாட்டார். அதுமட்டு மின்றி இப்படிப்பட்ட வைத்திய சாஸ்திர நுணுக்கங் களைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசக்கூடாதென்ற கருத்தோடுதான் இந்த அதிகாரத்தை இந்த முறையில் வகுத்திருக்கிறார். இந்த விசேட உரையிலுள்ள பல நுணுக்கங்களும் வைத்தியத் தொழிலாளி தனித்தனியே கவனிக்கக்கூடிய ஆராய்ச்சிகளுக்கு வேண்டியனவாக இருக்கலாம். ஆனால் இவையெல்லாம் சேர்ந்தால்தான் வைத்தியம் என்று எண்ணச் செய்வது யாருக்கும் பயனற்றதாவது மட்டுமன்றி சாதாரண மக்களைப் பயப் படுத்திவிடக் கூடியது.

எப்படி யெனில், பிணியுற்றவனுக்கு இருக்க வேண்டிய நான்கு தன்மைகள், வைத்தியனுக்கு அமைய வேண்டிய நான்கு தன்மைகள், மருந்துக்கு அமைய வேண்டிய நான்கு தன்மைகள், உழைச்செல்வானுக்கு இருக்கவேண்டிய நான்கு தகுதிகள் ஆகிய பதினாறும்

கூடியிருந்தால்தான் நோய்தீரும் என்ற கருத்தை இந்த விசேட உரை வெளியிடுகின்றது. அது "இவையெல்லாம் கூடியவழியல்லது பிணி தீராமையின் இத்தொகுதியையும் 'மருந்'தென்றார்" என்ற முடிவுரையால் தெரிகின்றது. இவையெல்லாம் கூடியிருந்தால் மிக நல்லது தான். ஆனால், இவையெல்லாமோ அல்லது இவற்றில் பலவோ கூடியிருக்கும் என்பது எதிர்பார்க்கக்கூடாத விஷயம். நோயுற்றவனுக்கு அமைந்திருக்க வேண்டுமென்ற நான்கு தகுதிகளில் 'மருத்துவன் வழிநிற்றல்' என்ற ஒன்றுதான் அவசியமானதும் எல்லோராலும் சாத்தியமானதும் ஆகும். 'பொருளுடைமை,' 'நோய் நிலை உணர்த்தல் வன்மை,' 'மருத்துத் துன்பம் பொறுத்தல்' என்ற மூன்றும் எல்லாரிடத்திலும் எதிர்பார்க்கத்தக்கனவல்ல. இந்த மூன்றும் இல்லாவிட்டால் நோய் தீராது என்று சொல்லக்கூடாது...நோய் தீர்ப்பானுகிய வைத்தியனுக்கிருக்க வேண்டுமென்கிற தகுதிகளில் நோய் கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியும் நுண்ணறிவுமுடைமை, பலகாலும் தீர்த்து வருதல் என்ற மூன்றும் அமைந்திருக்கவேண்டும் என்பது சரி. ஆனால் அந்த வைத்தியன் மனம் மொழி மெய்கள் தூயவனுக இருக்கவேண்டுமென்பது மிகை. ஏனெனில் இந்தத் தகுதிகள் அந்த வைத்தியன் அறியவேண்டிச் சொல்லப்படுவனவல்ல. வைத்தியனை நாடுகின்ற பொது மக்கள் வைத்தியனைப்பற்றி ஆராய்ந்துகொள்ள வேண்டிச் சொல்லப்படுவன. அவர்கள் எப்படி வைத்தியன் மன மொழி மெய்களால் தூயவன் என்பதைக் கண்டறிய முடியும்? செயலையும் மொழியையும் கண்டறியக் கூடுமானுலும் மனத் தூய்மையை யாரால் அறிய முடியும்? இது அனுபவத்துக்குப் பொருந்தாது... மருந்துக்கு அமையவேண்டிய தகுதிகள் என்று சொல்லப்படுகிற சுவை வீரியம் விளைவாற்றல்களில் மேம்படுதல், பல பிணிகட்கும் ஏற்றல், எளிதின் எய்தப்படுதல், பகுதியோடு பொருந்துதல் என்ற நான்கும் சேர்ந்த மருந்து எங்கும் இல்லையென்றே சொல்லிவிடலாம். எல்லா மருந்துகளும் சுவையுள்ளனவாக இருக்க முடியாது. சில மருந்துகள் அருவருக்கத் தக்கனவாகவே

இருக்க நேரிடும். பல பிணிகளுக்கும் ஒரு மருந்து என்பதும் எப்போதும் கையாளக்கூடிய உபாயமல்ல. எல்லா மருந்துகளும் எளிதில் எய்தக்கூடியதாகவும் இருக்க முடியாது......உழைச் செல்வான் என்ற (நர்ஸ்) இயற்றுவானுக்கு அமையவேண்டிய தகுதிகளான ஆதுரன்மாட்டு அன்புடைமை, மன மொழி மெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமை என்ற நான்கில் ஆதுரன்மாட்டு அன்புடையவனாக இருக்கவேண்டியதும், வைத்தியன் சொல்லியனவற்றை அவ்வாறே செய்யக்கூடியவனாக இருத்தலும் ஆகிய இரண்டு தகுதிகளே வேண்டியவை. மன மொழி மெய்கள் தூயவாக இருக்கவேண்டுமென் பதும் அறிவுடையவனாக இருக்கவேண்டு மென்பதும் மிகை. மன மொழி மெய்களால் தூயவனாக இருக்க வேண்டுமென்பதற்கு முன்னே சொல்லப்பட்ட ஆட்சே பங்கள் இங்கும் பொருந்தும். நோயாளிக்குப் பக்கத்தி லிருந்து கொண்டு, வைத்தியன் சொன்னபடி காலா காலத்தில் மருந்து கொடுத்துப் பத்தியம் கவனிக்கச் செய்து துணையாக இருக்கவேண்டியது மட்டும் செய்யத் தகுந்தவனானால், அதற்குமேல் உழைச்செல் வானுக்கு என்ன 'அறிவுடைமை' வேண்டும்? கல்வி கேள்விகளால் சிறந்த அறிவுடையவனாக இருக்க வேண்டு மென்பது உழைச்செல்வானுக்கு அவசியமில்லை. இருந் தால் நல்லதுதான். ஆனால், 'நர்ஸ்' வேலைக்கான 'உழைச் செல்வான்' அப்படி அமையவேண்டியது பொது விதியாக இருக்க முடியாது. ஏனெனில் அப்படி அறிவுடையவர்கள் 'நர்ஸ்' வேலைக்குக் கிடைக்க மாட்டார்கள். அன்றியும் இந்த 'நர்ஸ்' வேலை செய்யவேண்டிய பொறுப்பை ஏற்க வேண்டியவர் பல சமயங்களில் நோயாளியின் நெருங்கிய உறவினருள் ஒருவராகவோ நண்பருள் ஒருவராகவோ இருக்கவும் நேரிடும். அவர்கள் நோயாளியிடத்தில் அன்புடையவர்களாக இருப்பதோடு வைத்தியன் சொன்னபடி செய்யக் கூடியவர்களாக இருந்தால் மட்டுமே போதும் அல்லவா? அறிவுடைமைக் கென்று அவர்களுக்குப் பதிலாக வேறு எவரையும் தேட வேண்டியதில்லை.

இவற்றையெல்லாம் இவ்வளவு விரிவாக இங்கே விளக்கி விமர்சனம் செய்தது எதற்காக வென்றால்: எல்லாரும் எளிதில் அறிந்து பயனடையும் படியாகத் திருவள்ளுவர் வெகு சுருக்கமாக என்றும் 'பொய்யா மொழி'யாகச் சொல்லியிருக்கிற இந்த 'மருந்து' என்ற அதிகாரம், இந்த உரையினால் அதற்குரிய சிறப்பை இழந்துவிடுகிறது என்பதை உணர்த்தவே. திருவள்ளுவர் வேண்டுமென்றே விலக்கியிருக்கிற வைத்திய நுணுக்கங் களைப் புகுத்தி உரை செய்ததுமில்லாமல் நோயுற்றவன், வைத்தியன், மருந்து, உழைச்செல்வான் என்பனவற்றின் தகுதிகள் பதினாறும் "இவையெல்லாங் கூடிய வழி யல்லது பிணி தீராமையின், இத்தொகுதியையும் 'மருந்து' என்றார்" என்று இவற்றைத் திருவள்ளுவர் கருதினதாக அவர்மேல் சுமத்துவதும் சரியல்ல.

இப்படியெல்லாம் மறுப்புகள் சொல்லி, வணக்கத் துக்குரிய மாபெரும் உரையாசிரியரான பரிமேலழகர் உரைகளுக்குப்பழுதுசொல்லவேண்டி இருப்பது மனதுக்கு இன்பமான காரியமல்ல. இது அவரை அவமதிக்கச் செய்யப்பட்டதாகப் பிறர் எண்ணிவிடக் கூடுமோ என்ற அச்சமும் அடிக்கடி உதிப்பதுண்டு. எனினும் நிரந்தர மான சத்தியங்களையே கருதிய திருவள்ளுவருடைய நோக்கத்துக்கும் சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கும் பொருந்தாதவை என்று நிச்சயமாகப் புலப்படுகின்ற உரைகளை மாற்றாமலிருந்து விடுவதை மனச்சாட்சி ஒத்துக் கொள்ளவில்லை. இந்த மறுப்புகளெல்லாம் திருக் குறளுக்கு நிறைவு செய்யக் கருதியவைகளேயன்றி பரிமே லழகருக்கும் அவருக்கு முற்பட்ட உரையாசிரியர் களுக்கும் குறைவு செய்யக் கருதியவையல்ல; இந்தப் புது உரைகள் சொந்தக் கற்பனைகள் அல்ல. திருவள்ளுவ ருடைய கருத்தை ஒட்டியவைகளே. ஆதலின் அறிஞர்கள் இவற்றை ஆர்வத்துடன் அங்கீகரிப்பார்களென்றே நம்பு கின்றேன்.

ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளாக வாழையடி வாழையாகப் பண்டிதர்களிடை வழங்கி வந்துவிட்ட பரிமேலழகருடைய உரைகளை மறந்துவிடச் செய்வது

எளிதான காரியமல்ல. புது உரைகளை ஒத்துக்கொள்ள அறிவு சம்மதித்தாலும் மனப்பழக்கம் மறுக்கலாம். ஆனாலும், உலக மக்களுக்கெல்லாம் பொதுவான வேதம் எனத் தகுந்த திருக்குறளின் பெருமையைக்கருதி, அந்தப் பெருமைக்கு இந்தப் புது உரைகள் பழைய உரைகளை விடப் பொருத்தம் மிகுந்தனவாக இருப்பதைக் காணும் அறிஞர்கள் ஆதரிக்கத் தயங்கமாட்டார்கள்.

பரிமேலழகர் திருவள்ளுவர் காலத்துக்குச் சுமார் ஆயிரத்து முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின்னல் தோன்றியவர். அவர்தான் அழிந்து போகும் தருவாயிலிருந்த திருக்குறள் மூலங்களை ஒழுங்குபடுத்தி உலகத்துக்கு உதவியவர். எனினும் அவர், அவருடைய காலத்தில் வழங்கிவந்த மணக்குடவர் உரை முதலான உரைகளை ஒட்டியே உரை செய்ய நேர்ந்தது. திருவள்ளுவர் காலத்தில் அரங்கேற்றப்பட்ட உரைப் பிரதிகளும் அந்த உரைகளைச் சொல்லக்கூடிய பண்டித பரம்பரைகளும் அற்றுப்போன காலத்தில் பிற உரைகளை அனுசரித்தே உரை செய்த பரிமேலழகர் திருவள்ளுவருடைய கருத்துகளை ஆராயப் புகவில்லையென்றே அனுமானிக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் புது உரைகள் பரிமேலழகர் உரைகளைப் பூர்த்தி செய்வதாகக் கொள்ள வேண்டும்.

## வள்ளுவர் வகுத்த இல்லறம்

'வள்ளுவர் வகுத்த இல்லறம்' என்றால், மற்றவர்கள் வகுத்த இல்லற முறைகள் இருப்பது போலவும் அவற்றிற்கு வேறுபட்டதாகத் திருள்ளுவர் வகுத்த இல்லற முறை ஒன்றைப்பற்றி இங்கே சொல்லப்படுவது போலவும் தோன்றலாம். அல்லது வள்ளுவர் அவருடைய திருக்குறளில் சொல்லியிருக்கிற மற்றப் பகுதிகளை விட்டு அவர் வகுத்துள்ள இல்லறப் பகுதியைப் பற்றி மட்டும் சொல்லுவதற்காக 'வள்ளுவர் வகுத்த இல்லறம்' என்று இக்கட்டுரைக்குப் பெயரிடப்பட்டிருப்பதாகவும் தோன்றலாம். ஆனால் இந்தக் கட்டுரையின் நோக்கம் இந்த இரண்டுமல்ல. பின்னென்னவெனில், வள்ளுவர்

தான் இல்லறம் வகுத்தார் என்பதையும், இல்லறம் ஒன்றைத்தான் வள்ளுவர்வகுத்தார் என்பதையும் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

வள்ளுவர் இல்லறம் வகுத்தார் என்பது எப்படியெனில்: இல்லறத்தானுக்கு வேண்டிய எல்லா நல்லறிவுகளையும் தொகுத்துச் சொல்லுகிற நூல் திருக்குறள் ஒன்றுதான். இதை விளக்குவோம்: குடும்பத்துக்கும், சமுதாயத்துக்கும், ஊர்ப் பொதுவுக்கும் நாட்டுக்கும் சம்பந்தப்பட்ட எல்லாக் காரியங்களிலும் ஈடுபட்டிருக்கும் ஒவ்வொரு மனிதரும்—(ஆணும் பெண்ணும்)—இல்லறம் நடத்துகிறவர். உலக வாழ்க்கைக்கான எல்லாத் துறைகளும் இல்லறத்தைச் சேர்ந்தவை. மக்கள் உற்பத்தியாவது இல்லறத்தால்; சமுதாயம் நடப்பது இல்லறத்தால்; விவசாயம் நடப்பது இல்லறத்தால்; வியாபாரம் நடப்பது இல்லறத்தால்; ஊரின் பொதுநலம் இல்லறத்தால்; நாடு நாடாக, இருப்பது இல்லறத்தால்; நாட்டைக் காப்பதும் இல்லறமே; அரசு நடப்பதும் அதற்கென்றே. மனித வாழ்க்கைக்கான இத்தனைத் துறைகளிலும் இருக்கவேண்டிய எல்லா நல்லறிவுகளையும் திரட்டித் தெளிவாக வடித்துக் கொடுத்தவர் வள்ளுவர் ஒருவரே. திருக்குறளிலுள்ள எல்லா அறிவுகளையும் தனித்தனியே அங்கங்கே வெவ்வேறு இதர நூல்களிலும் காணலாம். ஆனால் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா நல்லறிவுகளையும் ஒரே நூலில் மற்றெவரும் சொல்லாத முறையில் வகுத்துக் கொடுத்தவர் வள்ளுவர்தான். தமிழில் மட்டுமல்ல; உலகிலுள்ள எந்த மொழியிலும் இதற்கு இணையான நூல் இல்லையென்பது, ஆராய்ந்த அறிஞர்கள் அனைவரும் ஒருமுகமாகச் சொல்லும் உண்மை.

இனி 'இல்லறம் ஒன்றைத்தான் வள்ளுவர் வகுத்தார்' என்பது என்னவெனில்: திருக்குறள் எழுதப்பட்டதே இல்லறத்துக்காகத்தான். மனிதன் கடைப்பிடிக்க வேண்டுமென்ற உறுதிப் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லப்படுகிற நான்கும் என்பது நூல்களின் துணிபு. அறம்

என்பது வாழ்க்கைக்கான நல்ல காரியங்களைச் செய்ய வேண்டிய கடமை. பொருள் என்பது வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்களைத் தரக்கூடிய செல்வம். இன்பம் என்றது ஆணும் பெண்ணும் கலந்து அனுபவிக்கும் காம இன்பம். வீடு என்பது உலக வாழ்க்கை முடிந்து, உயிர் (ஆன்மா) உடலை விட்டுப் பிரிந்த பின் போய்ச் சேரவேண்டும் என்று விரும்பப்படுகிற மோக்ஷம். 'வீடு' என்ற சொல்லுக்கு 'விடுதலை' என்பது பொருள். அதாவது, மனிதனுடைய உடலில் சிறைப்பட்டு உலகத் துன்பங்களில் உழன்று கொண்டிருந்த ஆன்மா அதனின்றும் விடுதலையடைந்து மறுபடியும் உடலிற் சிக்கிக் கொள்ளாத ஒரு நிலையைச் சேர வேண்டும் என்று நம்பப்படுகிற குறிக்கோள். ஆம் முக்தி, மோட்சம், பேரின்பம் என்று பல பெயர்களால் சொல்லப்படுகிற இந்த 'வீடு' என்பது வெறும் நம்பிக்கைதான். புலன்களுக்கு ஒரு சிறிதும் எட்டாததாகி வெறும் அறிவுக்கு மட்டும் தட்டுப்படுகிற இந்த 'வீடு' என்ற நம்பிக்கை சொல்லாலும் எழுத்தாலும் நிரூபிக்க முடியாது. அதை இல்லையென்று வாதிக்கின்றவர்களுக்குச் சமாதானம் சொல்வதும் எளிதான காரியமல்ல. மேலும் இந்த 'வீடு' என்ற முக்தி நிலையைப் பற்றி வெவ்வேறு மதங்கள் வெவ்வேறு விதமாகச் சொல்லுகின்றன. ஆதலால் விளக்க முடியாததும் விவாதத்துக்கு இடமுள்ளதுமான 'வீடு' என்பதை விட்டுவிட்டு அறம், பொருள், இன்பம் என்ற மூன்றை மட்டும் திருவள்ளுவர் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

விளக்க முடியாத விஷயமானதால் 'வீடு' என்பதை விட்டு விட்டார் என்றாலும், 'வீடு' என்பதைப் பற்றிய நம்பிக்கையை அவர் விட்டு விடவில்லை. நெடுங்காலமாகத் தமிழர்கள் போற்றிவரும் மெய்ஞ்ஞான நோக்கத்தையும் வீடு பெறும் நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்டே அறங்களை வகுத்திருக்கிறார். 'வீடு' என்ற நம்பிக்கையோடு நடத்தப்படுகிற வாழ்க்கையில் இரண்டு வித அறங்கள் உண்டு. ஒன்று இல்லறம்; மற்றொன்று

துறவறம். இல்லறம் என்பது மனைவி மக்களோடு வாழ்ந்து தெய்வ நம்பிக்கையோடும் கடமை உணர்ச்சியோடும் காரியங்களைச் செய்து, சமுதாயத்துக்குப் பயன் படக் குடித்தனம் நடத்துவது. இல்லற வாழ்க்கையை முறையோடு நடத்தினால், அது தானாகவே ‘வீடு’ என்று சொல்லப்படுகிற பேரின்ப நிலைக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும்.

துறவறம் என்பது மனைவி மக்கள் ஆசையை விட்டொழித்து, ஆகாரங்களைக் குறைத்து, ஐந்து புலன்களையும் அடக்கி, உலக விவகாரங்களில் ஈடுபடாமல் எந் நேரமும் ஆன்ம சிந்தனையோடு தவம் செய்து, மீண்டும் பிறவியில்லாமலிருக்கும் நோக்கத்தோடு ஆசைகளில்லாமல் செய்து கொள்வது.

இந்த இரண்டு வழிகளில் இல்லறம் உலக நடையோடு ஒட்டி நடப்பது. துறவறம் உலக நடையினின்றும் விலகி நடப்பது. இல்லறம் மனிதப் பிறவியின் இயல் போடு சேர்ந்தது. துறவறம் மனித இயல்புக்கு மாறு பட்டது. இல்லறம் இல்லாவிட்டால் உலகத்தில் மனித சமுதாயம் இல்லை; துறவறமும் தோன்றாது. உலகத்தில் மிகப் பெரும் பகுதியான மனிதர்கள் மனைவி மக்களோடு குடும்ப வாழ்க்கை நடத்துவதையே விரும்புகிறவர்கள். மிகச் சிறு பகுதியினரே மனைவி மக்கள் ஆசையை விட்டு விடக் கூடியவர்கள்.

அதனால் மனிதன் மேற்கொள்ள வேண்டியது இல்லறமே என்பது வள்ளுவருடைய வாக்கு. ஆனாலும் துறவறம் என்பதும் உண்மை. அதனை அவமதிக்கக் கூடாது என்பதும் வள்ளுவருடைய போதனை. ஆனால் திருவள்ளுவர் இல்லறத்துக்குத்தான் முதன்மை தந்திருக் கிறார். துறவறத்துக்கு வேண்டிய முக்கியமான கொள் கைகளை 130 குறள்களில் சொல்லி முடித்துவிட்டு, மீதி 1200 குறள்களிலும் இல்லறத்துக்குத் தொடர்புடைய விஷயங்களையே சொல்லியிருப்பதிலிருந்து வள்ளுவர் இல்லறத்தைக் கருதித்தான் தமது திருக்குறளை வகுத் திருக்கிறார் என்பது தெளிவாகிறது. வள்ளுவர்

இல்லறத்துக்குத் தந்துள்ள சிறப்பைக் கீழுள்ள குறள் ஐயம் திரிபுகளுக்கிடமில்லாமல் காட்டுகின்றது:

> அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
> பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை: இரு வகை அறத்தினும் நூல்களால் அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே; ஏனைத் துறவறமோ வெனின், அதுவும் பிறனாற் பழிக்கப்படுவதில்லையாயின், அவ் வில்வாழ்க்கையோடு ஒரு தன்மைத்தாக நன்று—என்பது.

இந்த உரை வள்ளுவருடைய கருத்தைச் சரியாகச் சொல்லுவதாக இல்லை. இக்குறளிலுள்ள 'அஃதும்' என்பதற்கு 'ஏனையத் துறவறமோ வெனின் அதுவும்' என்பது, இயல்பான பொருளல்ல. வலிந்து கொண்ட பொருளாகிறது. 'பிறன் பழிப்பதில்லாயின் நன்று' என்பது துறவறத்துக்கு மட்டும்தானா? இல்லறம் 'பிறன் பழிப்பதில்லாமல் இருக்க வேண்டாமா? மேலும் 'பிறன்' என்பது யார்? என்ற கேள்விகளுக்கு இடமுண்டாகிறது.

'அஃதும்' என்பதற்கு 'அதுவும்'—அல்லது 'அது வானாலும்'—என்பதுதான் நேரான பொருள். இந்தச் சொல்லில் துறவறத்தானைச் சேர்ப்பது சரியல்ல. இல்லறத்தானைச் சொல்லிவிட்டு அடுத்தாற்போல் 'பிறன்' என்ற சொல் வருவதால் இல்லறத்தானை விட்டுப் 'பிறன்' ஆகிய துறவறத்தான் என்று பொருள் கொள்வதுதான் சரியானது. அதனால் இந்தக் குறளுக்குச் சரியான பொருள் என்னவென்றால்:

அறன் என்று சொல்லப்படுவதே இல்வாழ்க்கை தான்; ஆனாலும் பிற அறத்தானாகிய துறவறத்தானை இகழ்ந்து விடாமல் இருப்பது நல்லது—என்பது. அதாவது மனிதனுக்கு அறம் என்று சொல்லப்படுவதே இல்லறம்தான்; ஆனாலும் துறவறமும் உண்டு. அதைக் குறைவாக எண்ணிவிடக்கூடாது. 'ஆனாலும்' என்ற வார்த்தை போட்டு முன் சொல்லப்பட்டதன் வேகத்

ளைதக் குறைக்கிருர். முன்ஞல் சொன்னது 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்பது 'ஏ' காரத்தால் 'இல்வாழ்க்கைதான் அறம்; அறம் என்பது வேருென்று மில்லை' என்பது போலச் சொல்லிவிட்டதால் உடனே துறவறத்தை நினைப்பூட்டி அதை இல்லறத்தான் குறை வாக எண்ணிவிடக்கூடாது என்று எச்சரிக்கின்ருர்.

துறவறம் மேற்கொள்வது, பிறவிப்பிணியினின்றும் விடுதலையடைந்து இறைவஞகிய தெய்வத்துடன் கலந்து கொள்ளவேண்டும் என்ற நோக்கத்தோடுதான். உலக இன்பங்களையெல்லாம் வெறுத்து, உடலை வாட்டி, ஐம்புலன்களை அடக்குவதற்குப் பலவிதத் துன்பங்களைச் சகித்துக்கொண்டு, தெய்வத்தோடு கலந்து கொள்ள வென்று முயலவேண்டிய கஷ்டங்கள் இல்லாமலேயே பேரின்பத்தை அடையலாம் என்று அடுத்த குறளில் அழுத்தமாகச் சொல்லுகிருர்:

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும
தெய்வத்துள் வைக்கப்படும்.

இந்தக் குறளுக்கும் பரிமேலழகர் திருவள்ளுவரின் கருத் துக்கு ஒவ்வாத உரை செய்திருக்கிருர்.

இதற்குப் பரிமேலழகர் தரும் உரை: இல்லறத் தோடு கூடி வாழுமியல்பினுல் வையத்தின்கண் வாழ் பவன் வையத்தானே யெனினும் வானின்கண் உறையும் தேவருள் ஒருவஞக வைத்து நன்கு மதிக்கப்படும்—என்பது.

இந்தக் குறளின் கருத்து இதுவல்ல. 'தெய்வம்' என்ற பதம் கடவுள் ஒருவனைத்தான் குறிக்கும். தேவர்கள் தெய்வமல்ல. மனிதர்களைவிட தெய்வத் தன்மை அதிகம் உள்ளவர்கள் என்று கருதப்படுவதால் தேவர்களுக்கு அப்பெயர் சொல்லப்படுகிறது. ஆதலால் 'தெய்வத்துள் வைக்கப்படும்' என்பதற்கு 'தேவருள் ஒருவஞக வைத்து நன்கு மதிக்கப்படும்' என்பது பொரு ளல்ல. 'நன்கு மதிக்கப்படும்' என்ருல் யாரால் நன்கு

மதிக்கப்படுவது? மனிதர்களாலா, தேவர்களாலா? எப்படியாயினும் வள்ளுவர் கருத்து இதுவல்ல என்பது இந்த அதிகாரத்திலுள்ள மற்றக் குறள்களால் தெரியக் கிடக்கின்றது.

இந்தக் குறளுக்கு வள்ளுவர் கருதும் பொருள் என்னவெனில்: உலகத்தில் வாழவேண்டிய முறையில் வாழ்கின்றவன் வானத்திலுள்ள தெய்வத்தோடு சேர்க்கப்படுவான்—என்பதே. அதாவது இல்லறத்தைச் சரியான முறையில் நடத்துகின்றவன் அதற்கென்று வேறு முயற்சியில்லாமலேயே, பேரின்ப நிலையை அடைவான். அவனுடைய இல்லற ஒழுக்கமே அவனை அங்கே கொண்டு போய்ச் சேர்க்கும்—என்பதுதான் இந்தக் குறளின் கருத்து.

இந்தக் குறளுக்கு இதுதான் கருத்து என்பதை இதற்கு முன்னுலுள்ள,

> அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
> போஒய்ப் பெறுவது எவன்

என்ற குறள் உறுதிப்படுத்துகின்றது. இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் தரும் உரைப்படியே: ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவானுயின், அவன் அதற்குப் புறமாகிய நெறியிற் போய்ப் பெறும் பயன் யாது?—என்பது. அதாவது ஒருவன் இல்லறத்தைச் சரியான முறையில் நடத்திஞல் துறவறத்துக்குப் போய் அடையக்கூடிய பயன் ஒன்றுமில்லை யென்பது. துறவறத்துக்குப் போகிற நோக்கம் எதுவோ அந்தப் பயனை இல்லறத்தைச் சரியாக நடத்துவதினுலேயே அடையலாம் என்பது கருத்து. இந்தக் கருத்தை பரிமேலழகரும் தமது விசேட உரையில் மிகவும் அழுத்தமாகச் சொல்லுகிருர். அந்த விசேட உரையில்: புறத்தாறு—இல்லை விட்டு வனத்துச் செல்லுதல். அந்நிலையின் இது பயனுடைத்தென்பார், 'போஒய்ப் பெறுவதெவன்' என்ருர் என்று துறவறத்துக்குப் போவதைவிட ஒழுங்கான

முறையில் இல்லறம் நடத்துவதே பயனுடையது என்கிறார்.

துறவறத்துக்குப் போவதன் நோக்கம் இறைவனோடு சேரும் பேரின்ப நிலையைப் பெறுவது என்பதுதான். ஆகவே, 'இல்லறத்தைச் சரியாக நடத்தினால் துறவறத்துக்குப் போகாமலேயே இறைவனோடு சேர்ந்துவிடும் பேறு பெற முடியும்' என்பதுதான் இந்தக் குறளின் கருத்து.

இந்தக் குறளில் இப்படிச் சொல்லிய திருவள்ளுவர் இதற்குப் பின்னால் வருகிற,

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்

என்ற குறளில் 'இல்லறத்தைச் சரியாக நடத்தி உலகத்தில் வாழவேண்டிய முறையில் வாழ்கின்றவன் வானத்திலுள்ள தேவர்களில் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப்படுவான்' என்ற கருத்தைச் சொல்லியிருக்க முடியுமா? மேலும்,

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்

என்ற குறளுக்கு அடுத்த குறள்:

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாரு ளெல்லாம் தலை

என்பது. இதன் பொருள்: முறைப்படி இல்வாழ்க்கை நடத்துகின்றவன் என்பவன் நல்ல கதி அடையவேண்டுமென்று முயற்சி செய்கின்ற தவசிகளுக்குள் சிறந்தவன் என்பது.

அத்துடன், இல்லறம் சுலபமானதென்றும் துறவறம் மிகவும் கடினமானதென்றும் நினைப்பதோ சொல்லுவதோ சரியல்லவென்று கண்டித்து துறவறத்தைக் காட்டிலும் இல்லறத்துக்குத்தான் பொறுப்பும் சகிப்புத் தன்மையும் அதிகமாக உண்டு என்பதை அடுத்த குறளில் சொல்லுகிறார்:

ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து

இந்தக் குறள் மிகவும் முக்கியமானது. இதற்குப் பரிமேலழகர் தந்துள்ள உரை சரியானதல்ல. இதற்குப் பரிமேலழகருடைய உரை என்னவெனில்: தவஞ் செய்வாரையும் தத்தம் நெறியின்கண் ஒழுகப் பண்ணித் தானும் தன்னறத்தில் தவருத இல்வாழ்க்கை, அத்தவஞ் செய்வார் நிலையிலும் பொறை யுடைத்து—என்பது.

இதில், 'ஆற்றின் ஒழுக்கி' என்பதற்கு 'தவஞ்செய் வாரையும் தத்தம் நெறியின் ஒழுகப்பண்ணி' என்ற பொருள் எப்படிப் பொருந்தும்? தவஞ்செய்கிறவர்களுக்கு உணவு, உறைவிடம் முதலிய உதவிகள் செய்து உபசரிப்பது இல்லறத்தான் செய்யமுடியும், செய்யவேண்டியது. ஆனல், தவஞ்செய்யும் துறவிகளை 'அவர்களுடைய நெறியில் ஒழுகப் பண்ணுவது' எப்படி முடியும்? அப்படி இல்லறத்தானல் நெறிகற்பிக்கப் படுகிற தவசி என்ன தவம் செய்யத் தகுந்தவன்? இல்லறத்தான் துறவறம் பூண்ட தவசிக்கு நெறிபுகட்டுவது எப்படி முறையாகும்?

ஆதலால், 'ஆற்றின் ஒழுக்கி' என்பதற்கு இது பொருளல்ல. பின் அதன் பொருள் என்னவெனில் இல்லறத்தானுக்கு முன்னல் சொல்லப்பட் டிருக்கிற 'ஆற்றின்படி நடத்தி' என்பதுதான். இல்லறத்தானுக்கு முன்னல் சொல்லப்பட்ட 'ஆறு' என்னவெனில்:

தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்ருங்கு
ஐம்புலத்து 'ஆறு'ஓம்பல் தலை

என்றபடி: முன்னோர்கள், தெய்வம், விருந்தினர், குடும்பத்திலுள்ள தன்னேடு சேர்ந்தவர்கள், தான் என்ற வரிசைக் கிரமத்தில் செய்யவேண்டிய கடமைகளை முறையாக நடத்தக் கவனித்துக்கொள்வது இல்லறத்தின் தலைசிறந்த நெறியாகும். அதாவது தனது முன்னோர்களைக் கருதிச் செய்யவேண்டிய காரியங்களை முதலில் கவனித்து, அதன் பிறகு தெய்வ வழிபாட்டுக்

கானவற்றைக் கவனித்து, அதன்பின் வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினர்களை உபசரிப்பதைக் கவனித்து, அதற்கடுத்துத் தன் மனையிலுள்ள மற்ற சுற்றத்தாரைக் கவனித்துவிட்டுக் கடைசியாகத் தன் சுகத்தைக் கவனிப்பது என்ற முறையில் இந்த ஐந்து பகுதிகளான கடமைகளைச் செய்வது என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பது இல்லறத்தின் தலைசிறந்த நெறியாகும்—என்பது இதன் கருத்து. இந்த ஐம்புலத்து 'ஆறு' என்பதுதான் 'ஆற்றின் ஒழுக்கி' என்பதிலுள்ள 'ஆறு'. எனவே:

ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

என்ற குறளுக்குச் சரியான பொருள் என்னவெனில்: முன்னால் சொல்லப்பட்ட ஐம்புலத்து ஆற்றின்படி (முறையின்படி) நடத்தி தர்மங்களில் தவறாத இல்வாழ்க்கையானது துறவறத்தான் மேற்கொள்ளும் தவத்தைவிட அதிகமான பொறுப்பும் சகிப்புத்தன்மையும் உடையது—என்பதாம்.

எனவே, மனிதன் இல்வாழ்க்கை நடத்துவதுதான் இயற்கையோடு ஒட்டினதென்றும், இல்லறத்தைச் சரியான முறையில் நடத்தி வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தால் வானுறையும் தெய்வத்தைச் சேரலாம் என்பதையும் சொல்லவே திருவள்ளுவர் திருக்குறளை வகுத்தார். அப்படிப்பட்ட இல்லறத்துக்குத் துணைபுரியும் அறிவே பொருட்பாலிலும் காமத்துப் பாலிலும் சொல்லப்பட்டவை. ஆகையால் வள்ளுவர் வகுத்தது இல்லறம்தான்; இல்லறத்தை வகுத்தவர் வள்ளுவர்தாம்.

★